# கல்கி

ஸ்லிட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



வரலாற்றுப் பிழை?

KALKI ● 03.05.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



ள்ளியங்கிரி
யிலே...

ற்காட்டாருக்கு
லோசனை!

மானத்தில்
க்கும் இளநீர்!

ய்யலுக்கு
!

கோவை மாவட்ட
வெஷல் - II

Exclusive

சத்குரு
ஜக்கி வாசுதேவ்



# சிறுநீர் கசிவு பிரச்னையா?

## இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

# UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

## "சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள்". அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர்**
**அண்டு ஆஸ்பிட்டல்,**
**901, திருச்சி ரோடு,**
**இராமநாதபுரம்,**
**கோயம்புத்தூர் 641 045.**
**0422-2323456, 2323333**

தங்கள் பிரச்சனையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம்.
ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!

## GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com    Web : www.urogynecology.in

PURE GHEE SWEETS

60 SWEET YEARS



# இனிப்புலகில்
# 60 இனிய ஆண்டுகளாக

இந்த இனிய பயணத்தை சாத்யமாக்கிய
அன்பான வாடிக்கையாளர்களுக்கு

## நன்றி

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்

*Divine Sweets.*
*Divine Taste.*

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்

23, மேட்டுப்பாளையம் ரோடு, கவுண்டம்பாளையம், கோவை -30 Email : sks@srikrishnasweets.net

கோயம்புத்தூர் • மேட்டுப்பாளையம் • பொள்ளாச்சி • உடுமலை • திருப்பூர் • பழனி • திண்டுக்கல்
• ஈரோடு • சேலம் • மதுரை • திருச்சி • ஸ்ரீரங்கம் • கரூர் • சென்னை • புதுச்சேரி • பெங்களூர் • ஹைதராபாத் • மும்பை • துபாய்

**மிகுந்த தடுமாற்றத்துக்குப் பிறகு தி.மு.க. அணியில் இடம்பெற்று இரண்டு தொகுதிகளையும் வாங்கிவிட்டார் திருமாவளவன். தாம் போட்டியிடும் சிதம்பரம் தொகுதிக்குப் புறப்பட்டவரை மடக்கினோம்.**

***எந்த வகையில் இது உங்கள் கட்சிக்கு முக்கியமான தேர்தல்?***

''ஒரு வலுவான கூட்டணியில் இணைந்து இந்த முறை தேர்தலைச் சந்திக்கிறோம். இந்தக் கூட்டணி வெற்றி பெறுவதன் மூலம் எங்கள் சக்தியை உறுதிப்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. இரண்டு





# "ராமதாஸ், வைகோவுக்குத் துணிச்சல் இல்லை!"

## - திருமாவளவன் காட்டம்

தொகுதிகளில் தனிச் சின்னத்தில் நிற்பதால், கணிசமான வோட்டுகளைப் பெற்று தேர்தல் கமிஷன் அங்கீகாரத்தைப் பெற முடியும். இதனால் எங்களுக்கென்று சின்னத்தைப் பெற முடியும். அந்த வகையில் இது எங்களுக்கு திருப்புமுனை தேர்தல்.''

***சமீபத்தில் ''தேர்தல், அரசியல் வெறுத்துப் போய்விட்டது'' என்று சொன்னது ஏன்?***

''ஈழப் பிரச்னை எனக்குள் ஏற்படுத்தியிருக்கும் கடும் மன உளைச்சல்தான் காரணம். நம்மால் என்ன செய்ய முடியுமோ அதையெல்லாம் இந்தப் பிரச்னையில் செய்தாலும் நமது எதிர்பார்ப்பை நிறைவேற்ற முடியவில்லை. குறிப்பாக, போரை நிறுத்த முடியவில்லை. ஆயிரக்கணக்கான தமிழர்கள் கொல்லப்படும் நிலையில் இங்கு தேர்தலைச் சந்திக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. தமிழ் இனமே ஈழத்தில் அழிந்த பிறகு தில்லி சென்று யாருக்காகப் போராடப் போகிறோம் என்று வேதனை பற்றி எரிகிறது. இப்படிப்பட்ட நிலையில் தேர்தலை எதிர்கொள்வது உறுத்தலாக உள்ளது. கூட்டணி தொடர்பாக அரை வேக்காட்டுத்தனமான விமர்சனங்கள் மற்றும் எங்கள் தொண்டர்களின் வேட்பாளர் ஆசைகளை நிறைவேற்ற முடியாத சூழல் ஆகியவை கடும் வேதனையை அளிக்கின்றன. எனவேதான் தேர்தல் அரசியல் வெறுக்கிறது என்று சொன்னேன்.''

***அ.தி.மு.க. அணியினர் ஈழப் பிரச்னை***

**தான் இந்தத் தேர்தலில் முக்கியம் என்று சொல்கிறார்களே?**

''அ.தி.மு.க. அணி ஈழத் தமிழர்களுக்கு மட்டுமல்ல; ஒட்டுமொத்த தமிழர்களுக்கும் எதிரான அணி. ஜெயலலிதா ஈழத் தமிழர்களின் விடுதலை குறித்தும், அவர்களது பிரச்னைகள் குறித்தும் வெறுப்பாகவும், கடுப்பாகவும் அணுகுகிற மனப்போக்கு கொண்டவர். சேதுக் கால்வாய் திட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்று சொல்கிறவர். இப்படிப்பட்ட இவரோடு பா.ம.க., ம.தி.மு.க., கம்யூனிஸ்டுகள் ஆகியோர் வைத்துள்ள கூட்டணி, தமிழகத்துக்கு ஆபத்தான கூட்டணி. அக்கூட்டணியில் பா.ம.க.வையும் ம.தி.மு.க.வையும் தவிர, அ.தி.மு.க.வும் கம்யூனிஸ்டுகளும் ராஜபட்சயவின் குரலை எதிரொலிப்பவர்கள்.''

**பா.ம.க., ம.தி.மு.க.வுடன் நீங்கள் இல்லாதது உறுத்தவில்லையா?**

''ஈழப் பிரச்னையில் பா.ம.கவும், ம.தி.மு.க.




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : **லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் : **கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு : **எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

வும் உண்மையாகக் குரல் கொடுக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், இந்தக் கட்சிகள் பெரிய வரலாற்றுப் பிழையைச் செய்துவிட்டன. ஈழப் பிரச்னையில் ஒருமித்த கருத்துக்களைக் கொண்ட கட்சிகளை வைத்து, புதிய அணியை உருவாக்கியிருக்க வேண்டும். அது காலத்தின் கட்டாயமானதாகும். இன்று ஏற்பட்டிருக்கிற குழப்பத்துக்கும் தேக்கத்துக்கும் காரணம், இது போன்ற அணியை கட்டமைக்க ம.தி.மு.க.வும்., பா.ம.க.வும் தயங்கியதுதான். மருத்துவருக்கும், வைகோவுக்கும் அந்தத் துணிச்சல் இல்லாததால்தான் நாங்கள் இரு அணிகளாகப் பிரியும் சூழல் உருவானது.''

***''சரணடைந்தால் பிரபாகரனைக் கௌரவமாக நடத்த வேண்டும்'' என்கிறாரே கலைஞர்?***

''இது குறித்து கலைஞரிடம் பேசினோம். அப்போது எல்லோருக்குமே கண்கள் கலங்கும் நிலை ஏற்பட்டது. 'அவரது உயிருக்கு ஆபத்து வராது என்றும், அப்படி நடந்தாலும் பிரபாகரன் மாவீரன் என்கிற வரலாறு இல்லாமல் போகாது' என்றும் கலைஞர் கூறினார். மேலும் ராஜீவ் காந்தி ஒருமுறை பிரபாகரனைப் பற்றிப் பேசும்போது 'இப்படி ஒரு மாவீரனை இதுவரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை' என்று பிரமிப்படைந்ததாகவும் கலைஞர் கூறினார். அந்த மாவீரனுக்கு உரிய மரியாதையை வழங்க வேண்டும் என்ற அர்த்தத்தில்தான் அவ்வாறு குறிப்பிட்டாரே தவிர, பிரபாகரனைக் கொச்சைப்படுத்தும் விதத்தில் கூறவில்லை.''



**"பிரபாகரன் உயிருக்கு ஆபத்து வராது. அப்படி வந்தாலும் அவரை மாவீரன் என்றே வரலாறு சொல்லும் என்றார் கலைஞர்!"**



***இந்நிலையில் காங்கிரஸை எதிர்த்துப் பிரசாரம் செய்வீர்களா?***

''ஒரு கூட்டணியில் இருந்து கொண்டு கூட்டணி தர்மத்தை மீறுவது அநாகரிகமான செயல் ஆகும். அத்தகைய உள்ளடி வேலைகளை உறவாடிக் கொண்டு செய்வது நல்லதல்ல.''

***விழுப்புரம் தொகுதியில் உங்கள் வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதில் ஏன் தடுமாற்றம்?***

''ஆதரவாளர்களின் வட்டாரத்தில் பார்க்கும் போது மடிப்பாக்கம் வேலாயுதத்தைத் தேர்ந்தெடுத்தோம். அவர் மீது வழக்கு இருக்கிறது என்றதும் விலக்கிவிட்டோம். எந்த நீதிமன்றமும் அவருக்குத் தண்டனை கொடுக்காத நிலையில் சட்டப்படி அவர் தேர்தலில் நிற்க முடியும். இருந்தும் தார்மிக ரீதியாக நடந்து கொண்டோம்.''

***சிதம்பரம் தொகுதியில் அன்புக்கோ பாசத்துக்கோ இடம் கிடையாது என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?***

''அதை நான் வழிமொழிகிறேன்.''

**- ப்ரியன்**

தலைமுறை தற்கொலை



# சமாதியின் மேல் வள்ளுவர் சிலை!

**நா**ம் அடிமையாயிருக்கிறோம் என்று உணர்ந்த உடனேயே சட்டென இழுத்துக் கொள்ளும் அனல் தொட்ட கரமாய் சுதாரித்துக் கொண்ட முன்னோர்கள், மக்களுக்கு அதை உணர்த்தத் தொடங்கினார்கள். பாரதி கவிதையைக் கையில் எடுத்தார்; மகாத்மா அஹிம்சையாய்ப் பிரசங்கித்தார்; நேதாஜி ஆயுதம் ஏந்தினார்; அரவிந்தர் ஆன்மபலம் தூவினார். எல்லா கூட்டு முயற்சியும் ஒரே இலக்கை நோக்கி. நாம் அடிமை என்பதை உணர்த்தவும் அதிலிருந்து விடுதலை பெறவும்தான்.

இன்றும் தமிழினம் மெல்ல மெல்ல விரும்பி, விரும்பி அடிமையாகிக் கொண்டிருக்கிறது. திராவிட இயக்கங்கள் மதுவின் மூலம் இனத்துக்கு வெட்டிய மரணக் குழியை பா.ம.க. போன்ற இயக்கங்கள் மூட முயல்வது ஒரிஜினல் தமிழனுக்கு உத்வேக உற்சாகத்தைத் தந்துள்ளது. அரசியல் சித்தாந்த வேறுபாடுகள் கடந்து இதைப் பாராட்டத்தான் வேண்டும். அரசியல் ரீதியாக மட்டுமின்றி, மதுவுக்கு எதிரான யுத்தத்தை, தன்னைப் போல பாதிக்கப்பட்ட ஒவ்வொருவரும் தத்தமது வீட்டிலிருந்து துவங்குவதுதான் யுத்த யுக்தி என தனக்குள் சொல்லிக் கொண்டான் சசி.

வெட்கமும் சமூக பயமும் தான் ஞானத்தின் வாசல்.




அமிர்தம் சூர்யா

அதுதான் அப்பாவின் அகவாசல் திறக்கக் காரணம். மூடியிருக்கும் அப்பாவின் இருளறையின் இன்ன பிற ஜன்னல்கள், மனம் திறந்து பேசினால் திறந்துவிடும் என்று நம்பி சசி அப்பாவிடம் பேசத் தயாராகும் போதே...

''ஏம்மா பேச்சுப் போட்டி, இலக்கிய நிகழ்ச்சின்னு கலக்குவானே ஜீவி, எங்கே ஆளே காணோம்... உங்களுக்குள்ள சண்டையாம்மா?''

''ஆமாம்பா ஒரு சின்ன ஆர்க்யூமெண்ட்...'' என்று அந்த விவாதப் படலத்தை விவரிக்க ஆரம்பித்தான் சசி.

**ஞா**யிறு மாலை... அந்திச் சூரியன் தன் சிவப்பை எல்லோர் மீதும் பூசி சிலிர்ப்பேற்றிய பொழுது.

''ஜீவி நீ போற போக்கு சரியில்ல... பார்ட்டின்னா குடிதான்னு அர்த்தமா? இப்பவெல்லாம் குடிக்கிறதுக்கு சாக்கா ஒரு காரணத்தைத் தேடுற. இந்த சன்டே மாறன் பர்த்டே ஒரு சாக்கு!''

''என்ன சொல்ல வர்றே குடிக்கு நான்... அடிமைன்னா?''

''நீ ஒரு அடிமையா? அப்படியாயின் நீ நண்பனாக இருக்க முடியாது-ன்னு நீட்சே சொன்னதா படிச்சிருக்கேன். இது எல்லா அடிமைக்கும் பொருந்தும். இப் போதைக்கு நீ என் நண்பன்தான்.''

''மொதல்ல உன் வீட்டுல உன்னோட அப்பனைத் திருத்து.''

''அடேய் அப்பன், வீடு, சமூகம்னு ஒரு இனமே இந்தக் குடியால அழிஞ்சிக் கிட்டிருக்கு. அதுல நீயும் விழாதேன்னு தான் சொல்ல வந்தேன்.''



''குடி என்னமோ போன வருஷம்தான் வெளிநாட்டுல இருந்து இறக்குமதி ஆன மாதிரியும், தமிழனைக் கொல்ல சதி செய்யுறா மாதிரியும் பேசற! ஆதியில தமிழன் குடிச்சிக்கிட்டு இருந்தவன்தானே? தேனுல தயாரித்த கள்ளை மூங்கில் குழாயில ஊத்தி 'தேக்கள் தேறல்'ன்னு குடிச் சதை திருமுருகாற்றுப்படை சொல்லுது. 'இல் அடு கள் இன் தோப்பிப் பருகி'ன்னு பெரும்பாணாற்றுப்படை பேசுது. மது காய்ச்சப்பட்டு சந்தோஷமா குடிச்ச வீடுகளுக்குப் பேரு இல்லடுகள்னு ஆதார

**எச்சரிக்கை**

தற்கொலையின் மூன்றாவது தவணை: மறதி

''டேய்! நேத்து என்ன பேசினேன்னு தெரியலடா. கொஞ்சம் ஓவராயிடுச்சு. கலாட்டா ஏதாவது பண்ணிட்டேனா?''

மிருக்கு சசி.''

''அடப்பாவி... குடிகார இனம்னு எடுத்துக்காட்டு சொல்லி எருமை சாணியை எப்படிடா முகத்தில் பூசிக்க முடியுது?''

''அரசாங்கத்துக்குத் தெரியாதா நல்லது கெட்டது எதுன்னு?''

''இந்தப் பிரபஞ்சத்தின் மிகச் சிறந்த அறிவாளி திருவள்ளுவர்தான்னு அரசாங்கம் கொண்டாடுது. பஸ்ஸுல வைக்கிறோம். பாடத்தில் வைக்கிறோம். தலைகாணி சைஸ்ஸில் புக் போட்டு பேர் வாங்குறோம். சுனாமி வந்தாலும் சுருண்டு விழாதபடி உயரமா சிலை வைக்கிறோம். கோட்டம் கட்டுறோம். அவர் பேருல விருது கொடுத்துக் கொண்டாடுறோம்.

**குடியால் ஓர் இனமே அழிந்ததைப் பார்த்துதான், வள்ளுவர் கள்ளுண்ணாமை அதிகாரத்தை எழுதியிருப்பார்!**

ஆதியிலேயே தமிழன் குடிகாரன்தான்னு நீ சொல்ற. குடியாலே ஒரு இனமே சீர்கெட்டுச் சிதைஞ்சதப் பாத்ததால தானே 'கள்ளுண்ணாமை'ன்னு மதுவிலக்குக்கு அதிகாரம் போட்டு 'குடிக்காதே'ன்னு சொல்லியிருப்பார்.

அவரு வேணாம்னு சொன்னதை... வானளாவிய அதிகாரத்தோட வாரி வாரி ஊத்துறாங்க. 'உண்ணற்க கள்ளை'ன்னு சொன்னவர், 'நஞ்சுண்பர் கள் உண்பவர்'ன்னு அடிச்சு எழுதுனாரு. அந்த நஞ்சை அரசாங்கமே கொடுக்கிறதை எப்படி நியாயம்னு சொல்றே?''

''எல்லாம் தெரிஞ்ச மாதிரி பேசறியே குடியை நிறுத்தினா எப்படி கோட்டையை ஆளமுடியும்? ஆட்சி நடத்துற செலவை உன் அப்பனா கொடுப்பான்?''

''ஒரு இனத்தோட ஆயுசு பத்திப் பேசறேன். நீ ஆட்சியைப் பத்தி அலட்டிக்கிற. அரசாங்கத்தின் வரவுக்கும் செலவுக்கும் மதுதான் மையமாயிருக்குன்னு ஒரு புள்ளி விவரம் சொல்லுதுடா. பெரியார்ங்கிற வேரை மறந்த கிளைங்கதான் இந்தத் திராவிடக் கட்சிங்க.''

''அட! நீ கூட பெரியாரைப் பத்திப் பேசுற?''

''எல்லோரும் பெரியாரைப் பேசணும்டான்னு அந்த ஆர்க்யூமென்ட், அரசாங்கத்தின் இலவசத்துக்குக் கையேந்துற க்யூ மாதிரி நீண்டுக்கிட்டே இருந்துச்சப்பா'' என்றாள் அப்பாவிடம் சசி.

(தொடரும்)

''டாக்டர், இந்த பேஷண்ட்டுக்கு ஆபரேஷன் செய்ய எல்லா ஏற்பாடும் செஞ்சாச்சு. ஆனா, அனஸ்தீஷியா கொடுக்கிற டாக்டர் மட்டும் திடீர்னு வரலை... இப்ப என்ன பண்றது?''

''ஒண்ணும் கவலைப்படாதீங்க.. அந்த பேஷண்ட்டை டிஸ்சார்ஜ் செய்யும்போது நாம போடப்போற 'பில்'லை இப்பவே காட்டிடுங்க!''

- விமலா பிரகாஷ்



**சமீபத்தில் ஜப்பான் தலைநகர் டோக்கியோவில் கலைநிகழ்ச்சிகள் நடத்திவிட்டு, திரும்பி வந்துள்ள பாஸ்கியைச் சந்திக்கச் சென்றோம். தமது தலையை ''தட தட தட மொட்ட பாஸ்'' என்று தட்டிச்சொல்லியவாறே பேச ஆரம்பித்தார்...**

''**எஸ்.** ஆர்.எம். டெக்னாலஜீஸ் சார்பாக நான், குஷ்பூ, சுந்தர்.சி., இன்னும் பல கலைஞர்கள் டோக்கியோவில் ஹம் அண்டு ஹ்யூமர் (hum and humour) என்ற கலைநிகழ்ச்சியை நடத்தினோம். தொடர்ந்து ஆறு மணி நேரம் நடந்த புரோகிராமில் எட்டு ஓரங்க நாடகங்கள். காமெடியை கான்செப்டாக வைத்து நடத்திய நாடகங்களில், இரண்டில் குஷ்பு நடித்தார். நாடகங்களுக்கு மத்தியில் குஷ்புவையும், சுந்தர் சி.யையும் மேடையிலேயே வைத்து காமெடியாகப் பேட்டி எடுத்தேன். குஷ்புவுக்கு மட்டுமல்லாது, ஜப்பானியப் பார்வையாளர்களுக்கும் அது புது அனுபவமாக இருந்தது'' என்றார்.

# எஸ்கலேட்டர்




**ந**ம்ம ஊர் நமீதா மாதிரியே அங்கே டோக்கியோவில் 'ஜப்பான் நமீதா'ன்னு ஒரு ஜப்பான் பொண்ணு இருக்கு. நம்ம நமீதா மாதிரியே தஸ்புஸ்ன்னு இருக்கும். நாங்க அடிச்ச காமெடிக்கும், போட்ட ஆட்டத்துக்கும் ஈடு கொடுத்து ஜாலி பண்ணிடுச்சு.

நம்ம ஊர் நாக்கமுக்கவுக்கும், பரதநாட்டியத்துக் கும் ஜப்பான்பசங்க சூப்பரா ஆடறாங்க. இது எல்லாத்துக்குமே நம்ம சூப்பர் ஸ்டார் ரஜினிதான் காரணம். அவரோட 'முத்து' படத்தைப் பார்த்து இன்வால்வ் ஆன ஜப்பானியர்கள், இன்னைக்குவரைக்கும் தமிழ் சினிமாவுக்கு ரசிகர்களாக இருக்காங்க.

ஜப்பான் ரோட்ல எல்லா வாகனங்களும் சும்மா 160, 180 கிலோ மீட்டர் ஸ்பீடுல பறக்கறாங்க. ஆனாலும் சின்ன ஆக்ஸிடென்ட்கூட பார்க்க முடியலை. அந்த அளவுக்கு டிராஃபிக் ரூல்ஸை ஃபாலோ பண்றாங்க. யாராவது டிராஃபிக் ரூல்ஸை மீறினா கடுமையா அபராதம் போடறாங்க; அப்படியும் கேட்கலைன்னா, டிராஃபிக் பற்றி கிளாஸ் எடுக்கிறாங்க; அப்படியும் திருந்தலைன்னா, லைசென்ஸை கேன்சல் பண்ணிடறாங்க. நம்ம ஊருல சைக்கிள் கேப்ல ஆட்டோ ஓட்டுற, டிரைவருங்களையெல்லாம் ஜப்பானுக்கு அனுப்பி வைக்கணும். அதுக்கப்புறம் ஜென்மத்துக்கும் விதிகளை மீற மாட்டாங்க.

ஜப்பான் டூர்ல ரொம்



பப் பிடிச்ச விஷயம் சாப்பாடுதான். சாப்பாடு பொட்டலத்தை ஓப்பன் பண்ணா, பாம்பு இருக்குமோ, தவளை இருக்குமோன்னு பயந்துக்கிட்டே இருந்தேன். புளியோதரையும், வடையும் இருந்தது. நம்ம சாப்பாட்டை டோக்கியோவுலயும் சாப்பிட்டது மறக்கமுடியாத சந்தோஷம்'' என்கிறார்.

## பாஸ்கி பயணம்



# தத்துவம்!



''**நா**ன் கலைஞர் டீ.வி.யில் நடத்தும் 'வெட்டிப் பேச்சு லீக்' (VPL) புரோக்ராம் முழுக்க முழுக்கச் சிரிக்கத்தான். சிந்திக்க அல்ல. யாராவது மறந்தும் யோசிச்சீங்கன்னா நான் பொறுப்பல்ல'' என்கிறார்.

''ரயில்வே ஸ்டேஷன்லயும், ஏர்போர்ட்டுலயும் எஸ்கலேட்டர் இருக்கும். அதுல கால் வைக்கறதுக்கு முதல்ல கொஞ்சம் யோசிப்போம். ஏன்னா, அதுல அடுத்தடுத்து படிகள் சுழற்சியா இருக்கறதால எதுல கால் வைக்கறதுன்னு பயப்படுவோம். ஏதாவது ஒரே ஒரு படியை மட்டும் கவனமா பார்த்து காலை வைச்சால் ஈஸியா போகலாம். அதேபோல வாழ்க்கையையும், அந்த கேரியருக்குப் போலாமா, இந்த கேரியருக்கு வரலாமா போன்ற குழப்பங்கள் இருக்கும். இதையெல்லாம் தவிர்த்து ஏதாவது ஒரு விஷயத்தை மட்டும் இலக்காக வைத்தால் ஈஸியா மேலே போகலாம்ன்னு எஸ்கலேட்டர் தத்துவமா வெட்டிப் பேச்சு லீக்கில் சொல்றேன்'' என்ற பாஸ்கி, இந்த சம்மரைச் சமாளிக்க சில டுபாக்கூர் யோசனைகளையும் அடுக்கினார்.

''ஏ.ஸி. இருக்கற ஏதாவது ஷாப்பிங் மால்க்குள்ள போங்க. சும்மா பர்ச்சேஸ் பண்ற மாதிரி பாவ்லா காட்டுங்க; சாயந்தரமா வெளியில வாங்க. ஏ.ஸி. பஸ்ல காலையிலிருந்து மாலைவரைக்கும் சுத்துங்க. இந்த மாதிரி சீஸனுக்கேத்த அட்வைஸெல்லாம் புரோகிராம்ல தர்றேன்.

என்னதான் வெளிநாடு சுத்தினாலும் நம்ம ஃபேவரிட் என்னைக்கும் மைலாப்பூர்தான். நம்ம புளியோதரைக்கும், டிகிரி காப்பிக்கும், பீட்ஸாவும் பர்கரும் ஈடாகுமா? கபாலீஸ்வரர் தரிசனமும், மார்கழி மாசத்துல வரையற சூப்பரான கோலங்களும் இங்க விட்டா எங்க கிடைக்கும் அண்ணாத்தே?'' என்ற பாஸ்கியிடம், ''மெய்யாலுமே செம மேட்டர்தாம்பா'' என்றோம்!

**- ராகவ்குமார்**

சிவாஜி ஒ சுப்ரீம் பால்

**வ**ந்தமர்ந்த முத்துமாணிக்கத்தின் முகத்தை நிமிர்ந்து பார்க்கக்கூட கூச்சப்பட்டுக் கொண்டு அமர்ந்துவிட்டார் சிவாஜி. அவரை எப்படியாவது பேசவைக்க முயற்சி செய்து கொண்டிருந்தவர்கள் இருவர். ஒருவர் பி.என். பிள்ளை. இவர் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின் நேர்முக உதவியாளராக இருந்தவர். இன்னொருவர் அண்ணாமலைச் செட்டியார். இவரும் இந்திய தேசிய ராணுவத்தில் இருந்துவிட்டு இந்தியா திரும்பியவர்.

கடைக்கண்ணால் 'குறுகுறு'வென்று தன்னைப் பார்த்துக் கொண்டிருந்த சிவாஜியையும் மற்றவர்களையும், ''நீங்கள் விரும்பினால் என்னுடனேயே ஊருக்கு வரலாம்'' என்று அழைப்பு விடுத்தார் முத்துமாணிக்கம்.

''உங்களுக்கு எதற்குச் சிரமம்?'' என்று அவர்கள் தயங்க, ''சிரமமென்றால் அழைக்கவே மாட்டேன்'' என்று இவர் பதில் சொல்ல, 'சட்'டென்று குறுக்கிட்ட பி.என்.பிள்ளை, ''வீ வில் கம் சர்'' என்றதும் எல்லோரும் புறப்படுவதென்றும், அங்கிருந்து வேட்டைக்குப் போவதென்றும் தீர்மானமாயிற்று.

# முதல் வேட்டை!

3



ஆனைமலையிலிருந்து தாம் மேற்கொள்ளப்போகும் சில கிலோ மீட்டர் தூரப் பயணம், தம் வாழ்வின் இறுதிவரை தொடரும் என்பதை அப்போது சிவாஜி, முத்துமாணிக்கம் இருவரும் உணரவில்லை!

வேட்டைக்காரன் புதூருக்கு சிவாஜியும் நண்பர்களும் வந்து சேர்ந்தனர். அவர்களிடம் இருந்ததோ டபுள் பேரல் துப்பாக்கி. அது கோழிகளையும் புறாக்களையும் சுடுவதற்குத்தான்

மரபின்மைந்தன் முத்தையா

பயன்படும். வேட்டைக்குப் பயன்படும் துப்பாக்கிகள் பற்றி அவர்கள் அதிகம் அறிந்திருக்கவில்லை.

யானைகள், காட்டெருமைகள், புலிகள், கரடிகள் உலவும் காட்டில் வேட்டைக்குப் போகப் போகிறோம் என்பதில் அவர்கள் பரவசம் அடைந்தார்கள். அந்தக் காட்டின் அம்சங்கள் பற்றி விவரிக்கத் தொடங்கினார் முத்துமாணிக்கம். அவர்கள் குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவராக இருந்தவர் கொல்லங்கோடு அரசர். சேத்துமடையில், இவர்கள் தோட்டம் முடிந்ததும் 30 மைல் நீளத்துக்கு அவருடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்த அடர்ந்த காடு ஆரம்பமாகும். டாப்ஸ்லிப் உட்பட அவரது எல்லைக்கு உட்பட்டது. அந்தக் காட்டை அங்குலம் அங்குலமாய் அறிந்தவர் முத்துமாணிக்கம். அந்தக் காட்டுக்குள் சாலைகள் கிடையாது. மண்பாதைதான். தென்மேற்குப் பருவ மழையின் கனத்த பொழிவில் கலகலத்துப் போகிற காடு. மூவாயிரம் மில்லி மீட்டர் வரை மழை சர்வ சாதாரணமாகப் பொழியக்கூடிய வனாந்திர பூமி.

முத்துமாணிக்கம் குடும்பத்தில் அவரது முன்னோர்கள் எல்லாரும் கட்டை வண்டிகளில்தான் அந்தக் காட்டுக்குள் பயணம் போவார்கள். அவர்களுக்குச் சொந்தமாயிருந்த ஆயிரக்கணக்கான மாடுகளின் கோடைக்கால மேய்ச்சல் பூமி அது.

1942ல் ஜீப் வந்தது. இராணுவம் மட்டுமே முதலில் ஜீப்பைப் பயன்படுத்தி வந்தது. பிறகு தனியாருக்கும் ஜீப் கொடுக்கத் தொடங்கிய காலத்தில், வேட்டைக்குப் போகிறவர்கள்தான் ஜீப்பைப் பயன்படுத்தத் தொடங்கினார்கள். ஃபோர் வீல் டிரைவ் என்ற வசதி ஜீப்பிலேயே இருந்தது. அதைப் பயன்படுத்தினால் ஜீப்பில் 60 ஹார்ஸ் பவர் வரைக்கும் கிடைக்கும். துணிந்து ஓட்டுபவர்கள் காட்டில் எங்கு வேண்டுமானாலும் போகலாம். முத்துமாணிக்கம் ஜீப் ஓட்டுவதில் மன்னர்.

**வேட்டையைப் பற்றி முழுவதுமாக அறியாதவர்களுடன் வேட்டைக்குச் செல்வது மிக்க ஆபத்தான காரியம்.**

காட்டைப் பற்றியும், காட்டுக்குள் போகவுள்ள பயணம் பற்றியும் இவர் விவரிக்க, இரவு முழுவதும் கேள்விகளால் துளைத்தெடுத்தார்கள். விடியாத இரவும் முடியாத கேள்விகளுமாய்



ஆனைமலையில்...

இரவு நீண்டுகொண்டே போனது. தன்னிடமிருந்த துப்பாக்கி ரகங்கள் பற்றிச் சொல்லத் தொடங்கினார் முத்துமாணிக்கம். வந்திருந்த விருந்தினர்கள் அதிகபட்சமாய் அறிந்திருந்தது 12 போர் துப்பாக்கி. மிஞ்சி மிஞ்சிப் போனால் மான் சுடுவதற்குப் பயன்படும்.

வேட்டையைப் பற்றி முழுவதுமாக அறியாதவர்களுடன் வேட்டைக்குச் செல்வது மிக்க ஆபத்தான காரியம். வேட்டைக்குச் செல்பவர்கள் தாங்கள் கையாளும் துப்பாக்கியைப் பற்றியும், தோட்டாக்களைப் பற்றியும் தெளிவாகவும், பூரணமாகவும் தெரிந்து வைத்திருப்பது மிக மிக அவசியம். துப்பாக்கிகளிலே பல ரகங்கள் உண்டு.



✱ காட்டுக்குள் வேட்டை

ஒவ்வொரு துப்பாக்கிக்கும் ஒவ்வொருவிதமான ஹார்ஸ் பவர் உண்டு. அவற்றைக் கையாளும் முறைகளும் துப்பாக்கிக்குத் துப்பாக்கி வேறுபடும். 4.10 போர், 12 போர் என்பவை ஒரு வகையான துப்பாக்கிகள். அவை குறிப்பிட்ட அளவுதான் பயன்படும். இதற்கு ஸ்மூத்பால் என்று பெயர். நம்பர் என்று சொல்லப்படுகின்ற பலவித தோட்டாக்கள். ஒன்று முதல் 7, 8 வரை உண்டு. ஒவ்வொரு தோட்டாக்களிலும் வெடி மருந்தோடு பலவிதமான ஈயக் குண்டுகளை நிரப்பியிருப்பார்கள். இதற்கு மேல் எஸ்.ஜி., எல்.ஜி குண்டு என்ற தனிரகத் தோட்டாக்கள் உண்டு. பால் ரகத்தில் ஒரே ஒரு பெரிய ஈயக்குண்டு இருக்கும்.

பறவைகளுக்கு 1 முதல் 7, 8 வரை உள்ள தோட்டாக்களையும் சிறிய மிருகங்களுக்கு எஸ்.ஜி., எல்.ஜி. போன்றவற்றையும், நடுத்தர அளவிலான மிருகங்களுக்கு பால் குண்டையும் பயன்படுத்த வேண்டும். மிருகங்களுக்குத் தக்கவாறு தோட்டாக்களும், துப்பாக்கிகளும் மாற்றப்பட வேண்டும்.

பறவையைச் சுட உள்ள தோட்டாக்களில் பன்றி போன்ற மிருகங்களைச் சுட்டால், அதைவிட ஆபத்து வேறு தேவையில்லை. அந்த ஆபத்துதான் அவர்களுக்குக் காத்திருந்தது.

(தொடரும்)



# 'லொள்ளு' திலகம்!

**த**னக்கே உரிய 'லொள்ளு' பதில்களுடன் பேட்டியைக் கலகலப்பாக்கிய சத்யராஜ் லொள்ளு திலகம்!

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**கோ**னியம்மன், மேலைச் சிதம்பரம், காரமடை ரங்கநாதர் திருத்தலங்கள் பற்றிப் படித்ததும், உடனே சென்று தரிசிக்க ஆவல் பிறந்தது.

**- என்.காளிதாஸ், சிதம்பரம்**

'**ச**த்தியம் எது? அசத்தியம் எது?' என்பதைத் தெளிவாகப் பிரித்துச் சொன்னது பெரியவரின் அருள்வாக்கு.

**- ரா.ராஜேஸ்வரி, மாம்பலம்**

**தே**ர்தல் களம் பற்றிய கருத்துப்படம் சிரிக்க வைத்ததுடன் சிந்திக்கவும் வைத்தது.

**- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

**த**வணைமுறை தற்கொலை மிகவும் அருமை. இன்று எத்தனையோ குழந்தைகள், அப்பா குடிக்காமல் வீட்டுக்கு வர வேண்டுமென கடவுளை வேண்டிக் கொண்டு இருக்கின்றன.

**- வி.ஜி.சத்தியநாராயணன், நங்கல்லூர்**

**ரா**மதாஸ் சொல்வதைப் போல் அ.தி.மு.க.வுடன் கூட்டணி என்பது இயற்கையானதுதான். பின்னே எலெக்ஷன் முடிந்ததும் கூட்டணி கட்சியைக் கழற்றி விடுவதும் இரண்டு கட்சிகளுக்கும் இயற்கைதானே!

**- ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்**

**அ**க்ஷரலக்ஷம் பெறும் தலையங்கம்! தமிழ் ஈழம் என்ற தங்கள் பிரிவினைக் கோரிக்கையைக் கைவிடாதவரை விடுதலைப்புலிகள் வெல்வது சாத்தியமேயில்லை.

கல்கியைத் தவிர வேறு எந்த சஞ்சிகைகளும் சரி... அரசியல் கட்சிகளும் சரி... இதைச் சொல்வதற்கான துணிவைப் பெறவில்லை.

**- நேமத்து ஞானம், சென்னை**

"**வ**ருமான வரித் துறையினருக்கு மீன் பிடிக்கத்தான் தெரியும். சுறாமீன்கள், திமிங்கிலங்களை நெருங்கவே பயப்படுவாங்க" என்ற தராசுவின் பதில், 'நச்சோ நச்'.

**- கே.கஸ்தூரி, வேலூர்**

கோவை மாவட்டச் செய்திகள் :

**கதிர்பாரதி, ப்ரியன்**



கல்கி



2009 மே 3
விரோதி சித்திரை 20
மலர் : 67
இதழ் : 40

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## கருணாநிதியின் குழப்பம்!

**பி**ரபாகரனே ஒப்புக்கொண்ட ஒரு விஷயத்தை மறுக்கும் பரிதாப நிலைக்கு உள்ளாகியிருக்கிறார் கருணாநிதி! தேர்தல் கால அரசியல் நிர்ப்பந்தம் அவரைப் பேச வைக்க, பிரபாகரன் பயங்கரவாதி அல்ல; தமது நண்பர் என்று கூறியிருக்கிறார்! ராஜீவ் காந்தியின் மரணத்தைத் திட்டமிட்டு நிறைவேற்றியதை ஒப்புக்கொண்டதுடன் நியாயப்படுத்தியும் பேசியவர் பிரபாகரன். வன்முறைப் பாதையைக் கைவிடப்போவதில்லை என்று சூளுரைத்தவர். அத்தகைய ஒருவருடன் தமிழக முதல்வர் ஏன் நட்பு கொண்டாட வேண்டும்? விடுதலைப் புலிகள் அமைப்பில் உள்ள சிலரது தவறான வழிகாட்டல்தான் பிரபாகரனைத் தப்பு செய்ய வைக்கிறது என்று ஏன் சப்பைக்கட்டு கட்டவேண்டும்?

இதெல்லாம் போதாதென்று, "இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதற்காக அழுது புலம்புவது தவிர வேறு வழியில்லை" என்று வேறு கையாலாகாத்தனமாகப் பேசுகிறார் முதல்வர். அவர் மட்டும் உறுதி காட்டி, தமிழகத்தில் ஆதரவும் திரட்டியிருந்தால், 'நண்பர்' பிரபாகரனை நல்வழிப்படுத்தி, ஆயுதம் துறக்கச் செய்திருக்கலாமே! அதன் பின் மத்திய அரசு மூலம் சர்வதேச ஆதரவு திரட்டி, இலங்கை அரசை நிர்ப்பந்தித்து, இலங்கைத் தமிழர்களுக்குச் சிங்களவர்களுடன் சம உரிமைகள் பெற்றுத் தந்திருக்கலாமே! அதை விட்டுவிட்டு, இந்த விவகாரம் குறித்து, அலெக்ஸாண்டர் - போரஸ் என்பது போன்ற குழப்படி அறிக்கைகளை இப்போது தினத்துக்கு ஒன்றாக அவர் வெளியிடுவது, தேர்தல் களத்தில் அவருக்கு எதிராகவே திரும்பும்.

ஈழப் பிரச்னையை எதிர்த்து ஒரு நாள் வேலை நிறுத்தத்துக்கு அவர் அழைப்பு விடுத்தது அவருடைய தடுமாற்றத்தின் உச்சம். அரசோ முதல்வரோ வேலை நிறுத்தத்துக்கு அழைப்பு விடுக்கக்கூடாது என்கிற மரபையும் நீதிமன்ற வழிகாட்டலையும் மீண்டும் மீறத் துணிந்துள்ளார்!

* நான் கம்யூனிஸத்தை நம்புகிறவன்; கம்யூனிஸ்டுகளை அல்ல.
* அழகிரியின் உயிருக்கே ஆபத்து!
* நரேஷ் குப்தா (தேர்தல் ஆணையர்) மரியாதைக்குக்கூட என்னை வந்து சந்திக்கவில்லை...

போன்றவை அவர் கடந்த சில வாரங்களில் 'உதிர்த்த முத்துக்கள்.'

அதற்கு முந்தைய சில மாதங்களில் சேது சமுத்திர சர்ச்சை எழுந்தபோது, ஆத்திகர்களின் நல்லுணர்வுகளைப் புண்படுத்தும் விதமாக அவர் பேசியவற்றையும் தமிழக மக்கள் இன்னும் மறக்கவில்லை; மறப்பதும் கடினம்!

இத்தகைய அறிக்கைச் செம்மல், மதுரையில் மட்டும் 90,000 புதிய வாக்காளர்களுக்கான விண்ணப்பங்கள் வந்தது குறித்தும் சரி, இப்போது அதே தொகுதியில் வாக்காளர்களுக்கு வோட்டுக்காக 'டோக்கன்' (பணத்துக்கான பகிரங்க டோக்கன்) வினியோகிக்கப்படுவது குறித்தும் சரி, வாயே திறக்கவில்லை! ஸ்பெக்ட்ரம் ஊழல் குற்றச்சாட்டுகள் குறித்தோ மூச்சே விடவில்லை! இதையும் தமிழக வாக்காளர்கள் கவனிக்கத் தவறமாட்டார்கள்.

தமிழகத்தில் முன்னணி கட்சியின் தலைவர், நாற்பது தொகுதிகளிலும் தமது கூட்டணி ஜெயிக்க முடியும் என்ற நம்பிக்கையுடன் இருப்பவர், மைய அரசு அமைப்பதில் முக்கியப் பங்கு வகிக்கக் கூடியவர், பொறுப்புடனும் உணர்ச்சிவசப்படாமலும் பேசுவது அவசியம். இல்லாவிட்டால், வாக்காளர்களுக்கு மட்டுமல்ல, தொண்டர்களுக்கும் அவரிடமுள்ள நம்பிக்கை போய்விடும்! ●



தேர்தல் களம்
ஐயோ! ஆளை விடுங்க! பிரபாகரன் என் நண்பன்...
பா.ம.க
கம்யூனிஸ்ட்
பிரியும் வோட்டுகள்
இந்தா புடி! ஆர்த்தி டோக்கன்; சாப்பாட்டு டோக்கன்; டாஸ்மாக் டோக்கன்...
அந்த ஆளை உட்கார வைச்சீங்கன்னா, ஒரே இழுப்பு இழுத்துடுவேன்

துயரத்தில் இலங்கைத் தமிழர்கள்!

# "இந்தியா கைவிட்டுவிட்டது!"



"இலங்கைத்தமிழ் மக்கள் இந்தியா தங்களைக் காப்பாற்றத் தவறிவிட்டது என்று நினைக்கிறார்கள்" என்கிறார் ஸ்ரீஸ்ரீரவிசங்கர்.

ஏப்ரல் 20-22 மூன்று நாட்கள் ஸ்ரீலங்காவுக்கு அமைதிப் பயணம் மேற்கொண்டு, வவுனியா உள்ளிட்ட பல்வேறு பகுதிகளிலும் உள்ள இடம்பெயர்ந்த மக்கள் முகாம்களுக்குச் சென்று, ஈழத் தமிழ் மக்களைச் சந்தித்து, நம்பிக்கையூட்டும் விதமாகப் பேசி ஆறுதல் கூறிவிட்டு வந்திருக்கிறார் ஸ்ரீஸ்ரீரவிசங்கர். தம் ஸ்ரீலங்கா பயணத்தின்போது சிங்கள பௌத்த துறவிகள், எதிர்க்கட்சித்தலைவர் ரனில் விக்ரமசிங்கே, ஜனாதிபதி ராஜபாட்சய என பலதரப்பினரையும் சந்தித்துப் பேசிவிட்டு வந்திருக்கிறார்.

"ஸ்ரீலங்காவில் கடந்த முப்பது ஆண்டுகளாக தமிழர்கள் அனுபவிக்கும் கஷ்டம் கொடுமையானது. உணவுக்கு, துணிகளுக்கு, குடிதண்ணீருக்கு என்று எல்லாவற்றுக்கும் பிச்சை எடுக்கும் நிலையில் இருக்கும் அவர்கள் எல்லோரும் ஒரு காலத்தில் வசதியாக வாழ்ந்தவர்கள். வவுனியா முகாமில் சுமார் 70 ஆயிரம் மக்கள் இருக்கிறார்கள். அங்குள்ள மருத்துவமனையில் மட்டும் சுமார் இரண்டாயிரம் பேர் விடுதலைப் புலிகள், ராணுவத்தினர் மோதலில் அடிபட்டுச் சிகிச்சை பெற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் வசிக்கும் கம்பி வேலியிட்ட முகாம்களைச் சென்று பார்த்தபோது, அந்த வளாகங்களில் நிரந்தரமாக அவர்களைத் தங்க வைக்கும் திட்டத்தில் ஸ்ரீலங்கா அரசு இருக்கிறதோ என்ற எண்ணம் ஏற்பட்டது. முகாம் பகுதிக்குள்ளேயே பல பெரிய கட்டடங்களைக் கட்டிக்கொண்டு இருக்கிறார்கள். 'எல்லா பகுதிகளிலும் நிலத்தடியில் கண்ணிவெடி வைக்கப்பட்டிருக்கிறது. அவற்றை முற்றிலுமாக அகற்றிய பின்னரே அங்கே மக்கள் வசிக்க முடியும்' என்று காரணம் சொல்கிறார்கள். சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, 'நீங்கள் பேச்சு வார்த்தை மூலமாக இலங்கைத் தமிழ் மக்கள் பிரச்னையில் அமைதி ஏற்பட வழிசெய்யுங்கள்; இல்லை என்றால் சதாம் ஹுசைனுக்கு ஏற்பட்ட முடிவு உங்களுக்கு ஏற்படும்' என்று பிரபாகரனுக்குத் தகவல் அனுப்பினேன். அவர் மதிப்பளிக்கவில்லை."

"நோபல் அமைதிப் பரிசு பெற வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் நீங்கள் இத்தகைய அமைதி முயற்சிகளில் ஈடுபடுகிறீர்களா?" என்று கேட்டால், "நான் என் பணியைச் செய்கிறேன்; வேறு எந்த நோக்கமும் இல்லை" என்கிறார்.

- எஸ்.சந்திரமௌலி






**வி**யாழக்கிழமை விசு வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தான். அவன் பாட்டி கிளம்புவதற்கு ரெடியாக சின்னதாக பேக் வைத்திருந்தாள். நான் ஆட்டோ பிடித்து பாட்டியைக் கூட்டிக் கொண்டு மதுரை செல்வதற்கு ரயில் நிலையம் வந்து சேர்ந்தேன். பகல் நேரப் பிரயாணம் என்பதால் படிப்பதற்குச் சில வாரப் பத்திரிகைகளை வாங்கிக் கொண்டேன். ஆனால் போகும் வழியில் பாட்டி என்னுடன் பேசிக்கொண்டே வந்ததால் பத்திரிகையைப் படிக்கவில்லை. அதைவிட பாட்டி சொல்லிக் கொண்டு வந்த விஷயங்கள் சுவாரசியமாக இருந்தன.

பாட்டி பிறந்து வளர்ந்தது எல்லாம் மதுரைதானாம். அன்னக்குழி மண்டபம் என்ற பள்ளியில்தான் படித்தாராம். வீடு கோயிலருகிலேயே இருந்ததால் லீவு நாட்களில் கோயிலிலும் சில நாட்கள் சற்றுத் தள்ளி இருந்த காலி இடங்களிலும் விளையாடுவார்களாம். தமக்கு வயதாகி வருவதால் கடைசியாக ஒருமுறை எல்லாவற்றையும் பார்க்க ஆசையாக இருப்பதாகச் சொன்னார். தன்னைப் பற்றியே சொல்லிக் கொண்டு வந்த பாட்டி, 'சட்' என்று நிறுத்தி என்னைப் பார்த்து,

''ஆமா நீ ஏன் இன்னும் கல்யாணம் பண்ணிக்காம இருக்கே?'' என்றார்.

எதைச் சொல்வது? நான் காதலித்த பெண் நிர்ப்பந்தத்தால் வேறு ஒருவருக்கு மனைவி ஆனதையும், அவள் நினைவு இருப்பதால் வேறு யாரையும் திருமணம் செய்ய முடியாமல் இருப்பதையும் எப்படி பாட்டியிடம் சொல்லிப் புரியவைப்பது?

''சரி... சரி... விருப்பம் இல்லாட்டி சொல்ல வேண்டாம்.''

நான் பதில் ஒன்றும் சொல்லாமல் இலேசாகச் சிரித்தேன். அதன் பின் பேச்சு வார்த்தையைத் தவிர்க்க நான் ஒரு பத்திரிகையை எடுத்துப் படிக்க ஆரம்பித்தேன். பாட்டி ஜன்னல் வழியே வேடிக்கை பார்த்தபடி வந்தார். காற்று நன்கு வீசியது. பாட்டி அதை அனுபவிப்பது போல் கண்களை மூடிக் கொண்டார். தூங்குகிறாரா? அல்லது பழைய நினைவுகளில் மூழ்கி உள்ளாரா? அறிய முடியவில்லை.

■ ஆர்.சுந்தரம் ■

**ம**துரை கோயிலுக்கு அருகே ஒரு



# நினைவோ ஒரு பறவை!

ஹோட்டல் இருந்தது. அங்கேயே அறை எடுத்துக் கொண்டோம். பயணக் களைப்பில் பாட்டி சிறிது படுத்துத் தூங்கினார். பாட்டி வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த சாப்பாட்டை ரயிலிலேயே நாங்கள் சாப்பிட்டு விட்டதால் வேறு ஒன்றும் எங்களுக்கு வேண்டியிருக்கவில்லை.

மாலை நான்கு மணிக்கு ஆட்டோ பிடித்து பாட்டி படித்த பள்ளி, அவரது பழைய வீடு முதலியவற்றைப் பார்க்கக் கிளம்பினோம். புதிய புதிய கட்டிடங்கள் முளைத்திருந்தன. பாட்டி முதலில் குழம்பியவர், பழைய சில வீடுகளைப் பார்த்து தன் வீட்டை உறுதிப்படுத்தத் திரும்பினார். அங்கு அவரது வீடு இருந்த இடத்தில் அடுக்குமாடி குடியிருப்பு இருந்தது. பாட்டியின் கண்களில் கண்ணீர் வந்தது. கண்களைத் துடைத்தபடி,

''சேகர் வா. அந்தப் பழைய வீடுகளுக்குப் போய் வரலாம்.''

''அங்க யாரு பாட்டி இருக்காங்க?''

''ஒரு வீட்டில் என்கூடப் படிச்ச கமலா இருக்கா. இன்னொரு வீட்ல சுப்பிரமணி இருக்கான். அவங்களைப் போய்ப் பார்க்கலாம்.''

அந்த வீட்டின் காலிங்பெல்லை அடித்தேன்.

''யாரு?''

ஒரு இருபது வயது மதிக்கத்தக்க வாலிபன் கதவைத் திறந்தான்.

''நாங்க பாண்டிச்சேரில இருந்து வர்றோம். இங்க சுப்பிரமணின்னு...''

''நான்தான் சுப்பிரமணி... நீங்க யாருன்னு தெரியலையே!''

நான் சிரித்தபடி, ''தம்பி நாங்க தேடிட்டு வந்தது உன் தாத்தாவை...'' என்றேன்.

''வாங்க... உள்ளே வாங்க... அம்மா இங்க வாயேன்...''

உள்ளே இருந்து நடுத்தர வயதுப் பெண் வந்தார்.

''வாங்க... என்ன விஷயம்?''

''நாங்க பாண்டிச்சேரில இருந்து வர்றோம். சின்ன வயசுல இவங்க வீடு எதிர்த்தாப்பலதான் இருந்திச்சு... இப்ப ஃப்ளாட் ஆயிடுச்சு.

சுப்பிரமணியம் சார் இவங்க கூடப் படிச்சவர். அதுதான் அவரைப் பார்த்துட்

டுப் போகலாம்னு வந்தோம்.''

அந்தப் பெண் சற்றுத் தயங்கி,

''அவரு... அவரு... இரண்டு வருஷம் முன்னாடியே செத்துப் போயிட்டாரே!'' என்றார். பாட்டியின் கண்கள் கலங்கின.

''அடுத்த வீட்டில் கமலா இருக்காங்களா? இல்லே...'' பாட்டி விசும்பிய படியே கேட்டார்.

''கமலா இருக்காங்க... போய்ப் பாருங்க.''

பாட்டிக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. சுப்பிரமணியின் வீட்டில் தெரிந்தவர்கள் என்று யாரும் இல்லாததால் உடனே கிளம்பிவிட்டோம்.

கமலாவுக்குக் காது சுத்தமாகக் கேட்கவில்லை. கண் பார்வையும் குறைந்து போனதால் ரொம்பக் கஷ்டப்பட்டுப் புரியவைக்க வேண்டி வந்தது. இருவரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ள முடியாமல் கட்டித் தழுவி ஆனந்தக் கண்ணீர் விட்டுக்கொண்டனர். பாட்டி ஊரிலிருந்து கொண்டு வந்திருந்த சின்ன எவர்சில்வர் சம்படத்தை கமலாவிடம் கொடுத்தார்.

''என்னடி இது?''

''உனக்குப் பிடிக்குமேன்னு ரவா லட்டு செஞ்சு கொண்டு வந்திருக்கேன்.''

''என்னது...?''

மேற்கொண்டு கத்திப் பேச பாட்டிக்கு சக்தி இல்லாததால் ஒரு ரவா லட்டை விண்டு கமலாவின் வாயில் போட, சுவைத்தவர்,

''ரவா லட்டு... ரொம்ப நல்லா பண்ணியிருக்கேடி. உன் கைப்பக்குவம் யாருக்கு வரும்? ராமனுக்குத்தான் கொடுத்து வைக்கலை... அல்ப ஆயுசுல போயிட்டான் பாவி... நான் மகா பாவி..'' அழுதாள்.

''சும்மா இருடி... அழாதே!'' பாட்டி சொன்னது கமலாவுக்குக் கேட்கவில்லை.

''நீ வீசி எறிஞ்ச பந்தை நீதான் எடுக்கணும்னு நான் சொன்னப்போ.. அவன் பந்தை எடுக்கப்போய் உசிரை விட்டுட்டானே ஜானகி...!''

அழுதாள்! பாட்டிக்கும் உதடுகள் துடிக்க, கண்கள் கலங்கி அழுதாள். சிறிது நேரம் இருந்து விட்டுக் கிளம்பி விட்டோம்.

''பாட்டி கோயிலுக்குப் போகலாமா?''

''நாளைக்குப் போய்க்கலாம் சேகர்! மனசு சரியில்லை.''

''சரி பாட்டி.''

**அ**டுத்த நாள் கோயிலுக்குப் போய் தரிசனம் முடித்துத் திரும்பும்போது பாட்டி வெளிப்பிராகாரத்தின் ஒரு தூண் அருகே போய் அமர்ந்துகொண்டார்.

''ஏன் பாட்டி இங்கே உட்கார்ந்திட்டீங்க... கால் வலிக்குதா?''

''இல்லே... கொஞ்சம் இங்கே உட்கார்ந்து அப்புறம் போகலாம்.''

பாட்டி கண்ணாடி அணிந்துகொண்டு அந்தத் தூணில் எதையோ தேடினார்.

''என்ன பாட்டி தேடறீங்க?''

''ஒண்ணுமில்லே...''

பாட்டி சொன்னாரே தவிர கண்கள் அலைபாய்ந்தன. பின் ஒரு இடத்தைப் பார்த்து பாட்டியின் முகத்தில் புன்னகை படர்ந்தது. நான் பாட்டியின் அருகே சென்று பார்த்தேன். அந்தத் தூணில் ஜானகி ராமன் என்று ஆணியால் அழுத்தமாக எழுதப்பட்டிருந்தது.

**யா**ர் உசுப்பேற்றி விட்டார்கள் என்று தெரியவில்லை தொல்.திருமாவளவன் 'மின்சாரம்' படத்தில் முதலமைச்சராக நடிக்கிறார். ஏற்கெனவே இவர் நடித்துக் கொடுத்த படம் வெளிவராத சூழ்நிலையில் இப்படம் தயாராகிக் கொண்டிருக்கிறது. இந்தப் படத்தில் திருமாவளவன் பாடல் ஒன்றையும் எழுதி பாடலாசிரியராகவும் பிரமோஷனாகியிருக்கிறார்.

'விழித்தெழு மனிதா விழித்தெழு
அடிமை விலங்கை நொறுங்கிட
விழித்தெழு- குருதி கொப்பளிக்கும்
வேகத்தில் வெடித்தது' என்ற பாடலை

பாட்டிக்குக் கண்ணீர் வழிந்தது. ''பாட்டி ஏன் அழறீங்க?''

''சேகர் நான் உன்கிட்ட ஒண்ணு சொல்றேன். யார்கிட்டேயும் சொல்லக் கூடாது.''

''நான் ஒன்பதாவது படிச்சிட்டு இருந்தபோது, என் சொந்தத்துல ராமன்னு ஒருத்தன் இருந்தான். அவனுக்கு அப்போ பதினேழு வயசிருக்கும். அவனுக்குத்தான் என்னைக் கல்யாணம் செய்து கொடுப்பதாக இருந்திச்சு. ஒருநாள் விளையாடிட்டு இருந்தப்போ நான் வீசிய பந்து பாம்பு புத்துப் பக்கம் போய் விழுந்திடுச்சு...

அதை எடுக்க எனக்குப் பயமா இருந்திச்சு. அங்கு வந்த ராமன் தைரியமா பந்தை எடுத்துத் தந்தான். போகும் போது அங்கே வந்த பாம்பை மிதிச்சுட்டான். உடனே அது அவனைக் கொத்த, அவன் செத்துப் போயிட்டான். இந்தத் தூண்ல என் பேரையும் அவன் பேரையும் இடைவெளி விடாம ஜானகிராமன்னு எழுதி வெச்சிருக்கான்...''

நான் பாட்டியை அதிசயமாகப் பார்த்துக்கொண்டேயிருந்தேன்.

''எனக்குக் கல்யாணம் ஆனப்போ அவர்கிட்ட எல்லாம் சொன்னேன். அவர் இருந்தப்போ அடிக்கடி மதுரை வந்திருக்கோம். என்னை அன்பா கவனிச்சுக்கிட்டாரு. அவர் இறந்தபின் நான் மதுரை வருவதே இல்லை. இன்னும் அதிக நாள் நான் இருக்கமாட்டேன்னு நினைப்பு வந்திருச்சு. அதனால கடைசியா மதுரையைப் பார்க்க ஆசையா இருந்திச்சு. அதுதான் வந்தேன்.''

கேட்கக் கேட்க எனக்கு ஒரே பரவசமாக இருந்தது. என் கண்களும் கலங்கின. அன்றே பாண்டிச்சேரி கிளம்பினோம்.

''டேய் ரொம்ப நன்றிடா'' விசு என் கைகளைப் பற்றிக் குலுக்கினான்.

''போடா...! நான்தான் உனக்கு நன்றி சொல்லணும். மதுரை போயிட்டு வந்ததுல என் மனசு மாறிடுச்சு. வீட்ல பொண்ணு பார்க்கச் சொல்லணும்.''

சிரித்தபடி பாட்டியைப் பார்த்தேன். பாட்டி சிநேகமாகச் சிரித்தார். ●



# முதல்வர் திருமா!

பாடி, முதலமைச்சராக நடித்திருக்கிறார். இந்தப் பாடலைப் பாடியவர் திப்பு.

ஏற்கெனவே சரத்குமார் நடித்த நட்சத்திர நாயகன் போன்ற படங்களை இயக்கிய கோவை பிலிம் சிட்டி நிறுவனம் இப்படத்தைத் தயாரிக்கிறது.

திருமா சிதம்பரம் தொகுதியில் நாடாளுமன்ற வேட்பாளராக நிற்பதால் இரவு பகல் பாராமல் இப்படத்தில் தனது காட்சிகளை நடித்துக் கொடுத்தாராம்.

- சத்யா

# வண்ணத் தூரிகை



எல்லாருக்கும் முன்னால் பெரிய ரிஷபங்கள் முதுகில் முரசுகளைச் சுமந்துகொண்டு சென்றன. சற்று நேரத்துக்கொரு தடவை அந்த முரசுகள் அடிக்கப்பட்டபோது உண்டான சத்தம் அலை மோதிக்கொண்டு நாலாபுறமும் பரவியது.

"**அ**ப்பா! இந்தப் பட்டினத்துக்கு உங்கள் பட்டப்பெயரை எதற்காக வைத்தார்கள்?'' என்று கோமகள் குந்தவி தேவி, தந்தை நரசிம்மவர்மரைப் பார்த்துக் கேட்டாள்.

**இ**ருவரும் பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்து யானை மீது அம்பாரியில் வீற்றிருந்தார்கள்.

அந்தப் பட்டத்து யானைக்கு முன்னாலும் பின்னாலும் வேலும் வாளும் தாங்கிய வேல் வீரர்கள் அணிவகுத்துச் சென்றார்கள். இன்னும் பலவகைப்பட்ட விருதுகளும் சென்றன.

அம்பாரியின் மீது வீற்றிருந்த நரசிம்மவர்ம சக்கரவர்த்தியையும் அவர் அருமைப் புதல்வியையும் ஏக காலத்தில் பார்த்தவர்கள், உதயசூரியனையும் பூரணச் சந்திரனையும் அருகருகே பார்த்தவர்களைப் போல் திகைத் திண்டாடிப் போவார்கள்.

அந்த இருவருடைய திருமுகத்திலும் அந்தக் காலைக் கதிரவனின் ஒளி ஜொலித்துக் கொண்டிருந்தது. அவர்கள் அணிந்திருந்த கிரீடங்களிலும், மற்ற ஆபரணங்களிலும் பதித்த

# அஞ்சனம் தீட்டிய கண்கள்!

நவரத்தினங்களின் காந்தி, பார்ப்பவர்களின் கண்களைக் கூசச் செய்தன.

பல்லவ சக்கரவர்த்தி ஆஜானுபாகுவாய், கம்பீரமான தோற்றம் உடையவராயிருந்தார். வலிமையும் திறமையும் கொண்ட அவருடைய திருமேனியில் மென்மையும் சௌந்தரியமும் கலந்து உறவாடின. இராஜ களை ததும்பிய அவருடைய முகத்தில் காணப்பட்ட காயங்களின் வடுக்கள், அவர் எத்தனையோ கோர யுத்தங்களில் கைகலந்து போரிட்டு ஜயபேரிகை முழக்கத்துடன் திரும்பி வந்தவர் என்பதை ஞாபகப் படுத்திக்கொண்டிருந்தன.

கோமகள் குந்தவி தேவியோ, பெண் குலத்தின் அழகெல்லாம் திரண்டு உருக் கொண்டவள் போலிருந்தாள். பல்லவ சாம்ராஜ்யத்திலிருந்த மகா சிற்பிகளும் ஓவியக்காரர்களும், குந்தவி தேவியிடம் தங்கள் கலைத்திறன் தோற்றுவிட்டதென் பதை ஒப்புக்கொண்டார்கள். ''கோமகளின் கருவிழிகளில்தான் என்ன மாயமந்திர சக்தி இருக்கிறதோ, தெரியவில்லை. தேவி தமது அஞ்சனந் தீட்டிய கண்களை அகல விரித்து எங்களைப் பார்த்த உடனேயே நாங்கள் உணர்விழந்து மெய்மறந்து போய் விடுகிறோம். அப்புறம் சிற்பம் அமைப்பதெங்கே? சித்திரம் வரைவதெங்கே?'' என்றார்கள். ''எங்களையெல்லாம் கர்வ



பங்கம் செய்வதற்கென்றே பிரமன் குந்தவி தேவியைப் படைத்திருக்க வேண்டும்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

**- அமரர் கல்கியின் பார்த்திபன் கனவு நவீனத்திலிருந்து...**

**அமரர் கல்கி**




முகமது அசாருதீன் (மோரதாபாத்), மதன் லால் (உனா), சேத்தன் சர்மா (பரிதாபாத்), நவ்ஜோத் சிங் சித்து (அமிர்தசரஸ்), சேத்தன் சௌகான் (கிழக்கு டெல்லி) என்று முன்னாள் கிரிக்கெட்டர்கள் தேர்தல் களம் இறங்கி இருக்கிறார்கள். திலீப் வெங்சர்க்காருக்குக் கூட சிவசேனா டிக்கெட் கொடுக்கும் என்று சொல்லப்பட்டது. ஆனால் கொடுக்கவில்லை.

***(கிரிக்கெட்டருங்க அடிக்கப்போவது செஞ்சுரியா; டக்கான்னு மந்திரா பேடியைக் கேளுங்க)***

மேற்கு வங்காளத்தில் திரிணாமுல் காங்கிரஸ் தபஸ் பால், சதாப்தி ராய் என்று இரண்டு நடிகர்களை வேட்பாளர்களாக நிறுத்தி இருக்கிறது. அவர்கள் நடித்த திரைப்படங்களைத் திரையிடத் தடை விதிக்க வேண்டும் என்று தேர்தல் கமிஷனிடம் கோரியுள்ளது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி. ''தோல்வி பயம்; அதனால்தான் இப்படிக் கேட்கிறார்கள்'' என்று கேலி பேசுகிறது திரிணாமுல் கட்சி.

***(நம்ம ஊரு காமெடியன்களைக்கூட உடனே தேர்தல்ல நிறுத்துங்கப்பா! காமெடி சேனல்கள்ல அவங்க மொக்கை தாங்கலை.)***

# சினிமாவுக்கு



ப்ரீத்தி ஜிந்தா

காங்கிரஸ் கட்சி, கர்நாடகாவில், தேவகௌடாவுடன் ஒரு சீக்ரட் அண்டர்ஸ்டேண்டிங் செய்து கொண்டிருக்கிறதாம். அதன்படி வீரப்ப மொய்லி, மார்கரெட் ஆல்வா, பங்காரப்பா, ஜாஃபர் ஷெரீஃப் ஆகிய நான்கு பேரை எதிர்த்து தேவகௌடாவின் ஜனதா தளம் தன் கட்சி வேட்பாளர்களை நிறுத்தாது.

***(ஜெயிச்சு வந்தா ஆறு மாசம் கழிச்சு, என் மகனுக்காக யாராவது ராஜினாமா செய்யணும்னு கண்டிஷன் போடுவாரோ?)***

இந்தியாவிலேயே உ.பி.தான் நெம்பர் ஒன்! எதில்? வேட்பாளர்கள் டெபாசிட் இழப்பதில்! கடந்த மூன்று தேர்தல்களாக உ.பி.யில் போட்டியிட்டு

# எதிராக மார்க்சிஸ்ட்!

சுமார் ஆயிரம் வேட்பாளர்களுக்கு டெபாசிட் பறிபோயிருக்கிறது. முதல் பொதுத் தேர்தலிலிருந்து கணக்கிட்டால் இந்த எண்ணிக்கை ஒன்பதாயிரத்தைத் தாண்டிவிட்டது.

***(எலெக்ஷனுக்குக் கட்டுற டெபாசிட்டை பேங்க்ல போடுங்க! டெபாசிட்டும் மிஞ்சும்; வட்டியும் கிடைக்கும்)***



★ ஷாருக்கான்

**பெ**ரம்பலூர் தொகுதியில் தன் பிரசாரத்தின்போது தி.மு.க. வேட்பாளரான நடிகர் நெப்போலியன் தன்னுடைய ஹிட் பாடலான 'கிழக்கு சிவக்கையிலே... சூரியன் உதிக்கையிலே' என்ற பாடலைத் தவறாமல் பாடி உதயசூரியனுக்கு வோட்டு கேட்கிறார். மேலும், ''உங்கள் குறைகளை என்னிடம் சொல்ல, என்னை நெருங்க முடியாது என்று சிலர் என்னைக் குறை சொல்கிறார்கள். உங்கள் குறைகளை எனக்கு ஈமெயில், எஸ்.எம்.எஸ். மூலம்கூட அனுப்பலாம்'' என்று பேசுகிறார்.



★ ஆமிர்கான்

***(உங்க படம் டி.வி.யில் வரும்போது, எங்க மனுக்களை டி.வி. பெட்டிக்குள் போடலாமுங்களா?)***

**ஜா**ர்கண்ட் முதலமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்டு ஆறு மாதங்களுக்குள் எம்.எல்.ஏ. ஆவதற்காகப் போட்டியிட்டுப் படுதோல்வி கண்டு, ராஜினாமா செய்த சிபு சோரன், இப்போது தும்கா பாராளுமன்றத் தொகுதியில் களமிறங்கி இருக்கிறார். அதுமட்டுமில்லை! ஜம்தாரா சட்டசபைத் தொகுதியிலும் வேட்புமனு தாக்கல் செய்திருக்கிறார். தற்போது உடல் நலமின்றி டெல்லியில் சிகிச்சை பெற்று வரும் சிபுசோரன் இடையில் ஜார்கண்ட் வந்து வேட்பு மனுதாக்கல் செய்துவிட்டுப் போயிருக்கிறார்.

***(வாக்காளருங்க 'எதுக்கு ஐயா வீண் சிரமம்? பேசாம ரெஸ்ட் எடுங்க'ன்னு சொல்லிடப் போறாங்க!)***

**ஷா**ருக் கான், ப்ரீத்தி ஜிந்தா இருவரும் ஐ.பி.எல். போட்டிக்காக தென்னாப்பிரிக்காவில் இருந்தாலும், ஏப்ரல் 30ஆம் தேதி மும்பைக்குப் பறந்து வந்து தேர்தலில் வாக்களிக்கப் போகிறார்கள். அமெரிக்காவிலிருந்து ஆமிர்கான் மும்பைக்கு வந்து வாக்களிக்கப்போகிறார். ''தேர்தலில் தவறாமல் வாக்களியுங்கள்!'' என்பது இவர்களது மெசேஜ்.

***(உங்க பேரு வாக்காளர் பட்டியல்ல இருக்குதான்னு செக் பண்ணுங்க முதல்ல!)***

**- பரத் ராம்**



"ஒரு வாரமா எனக்கு
கெட்ட கெட்ட கனவா
வருது டாக்டர்!"

"எப்படி?"

"நீங்க ஆபரேஷன் பண்ற
மாதிரியும், நான்
பொழைச்சுக்கற மாதிரியும்."

- டி.ஜெய்சிங்

''போரிலே மன்னரின்
வாள் வீச்சைப்
பார்த்திருக்கிறாயா?''

''ம்ஹூம்... கால்
வீச்சைத் தான்
பார்த்திருக்கிறேன்!''

– டி.ஜெய்சிங்



# வாள் வீச்சு...



'மாத்தி யோசி'
என்னும் படத்தின்
தலைப்பு
சரியில்லைன்னு எப்படி
மாத்தி வச்சாங்க?

'யோசி மாத்தி'

– சி.ஆர்.நாகராஜன்






''டிரெய்ன் டிக்கெட்ல இருக்கறது உங்க பேர்தான்னு எப்படிய்யா நம்புறது?''

''சார் நான் வேணா பாத்ரூம்ல ஒளிஞ்சுக்கிறேன்... நீங்க ரெண்டு தடவை என் பேரைக் கூப்பிட்டு, நான் வர்றேனா இல்லையான்னு பாருங்க.''

''பையன் ஒரு ரூபாய் நாணயம் விழுங்கிட்டான். எடுக்க 500 ரூபாய் கேட்ட டாக்டர், எடுத்ததும் 1000 ரூபாய் வாங்கிட்டார்.''

''ஏன்? பையன் முழுங்கினது இரண்டு ரூபாய் நாணயம்!''

– டி.ஜெய்சிங்

''மன்னர் தீவிரமாக கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்!''

''படை பற்றியா?''

''ஊகூம்... அந்தப்புரப் பெண்களின் இடை பற்றி!''

– டி.ஜெய்சிங்

# கால் வீச்சா?



''அமைச்சரே... நான் தைரியசாலிதான் என்பதை மக்கள் ஒப்புக் கொள்கிறார்களா?''

''இல்லாவிட்டால் அவ்வளவு தூரம் ஓடிவர முடியுமா மன்னா?!''

– சி.சாமிநாதன்



# பந்தயம்

**கோவை புதியவன்**

''குமார், ஒரு பந்தயம்'' என்றதும் அவன் சுறுசுறுப்பானான்.

''பந்தயமா? சொல்லு... சொல்லு''

''ஏதாவது ஒரு கல்யாண மண்டபத்துல சாப்பிட்டு வரணும்''

''பணத்தை ரெடியாய் எடுத்து வை''

என்று கூறிவிட்டு பக்கம் இருந்த மண்டபத்துக்குள் நுழைந்தான்.

ஐந்து.., பத்து.., இருபது நிமிடங்கள்... ஆளைக் காணவில்லை.

முழுசாய் முப்பது நிமிடங்கள் ஓடி விட்டன. ஆள் காட்டி விரலை உயர்த்திய வாறு மகிழ்ச்சியுடன் வந்தான் குமார்.

திடீரென்று வேகமாய் வந்த குமாரிடம் ஒரு பெரியவர் ஏதோ கேட்க... சிறிது நேரத்தில் அங்கே கூட்டமும் சேர்ந்தது. எனக்கோ ஒன்றும் புரியவில்லை.

ஒரு வழியாய்க் கோபத்தோடு வந்த குமார் கத்தினான்.

''இனிமேல் பந்தயம்... கிந்தயம்னு ஏதாவது பேசிப்பாரு...''

''என்னாச்சு...?''

''அந்தப் பெரியவர், பொண்ணு வீட்டு சொந்தமான்னு கேட்டார். நான் மாப் பிள்ளை வீட்டு சொந்தம், அதோட மாப் பிள்ளை என்னோட கிளாஸ் மேட்னு சொன்னேன்'' என்றான் குமார்.

''சரியாத்தான் சொல்லியிருக்கிறே...''

''பாவி... அங்க நடக்கறது அறுபதாம் கல்யாணம்டா'' என்றான். ●



# ராசி

**உமாஸ்ரீ**

''பக்கத்து வீட்ல குடிவர்ற யாரும் மூணு மாசத்துக்கு மேல இருக்கற தில்லை... காலி பண்ணிட்டுப் போயிட றாங்க... கவனிச்சியா கமலா?''

''ம்ஹூும்! அந்தம்மா வீட்ல யார் குடி யிருப்பா? சரியான ராங்கிக்காரியாச்சே அவ!''

வம்புப் பேச்சை ஆரம்பித்து அசை போட்டனர், அடுத்த காம்பௌண்ட் மங்களமும், கமலாவும்!

அதே நேரம் -

''புரோக்கரய்யா எப்படியாவது எனக்கு அந்த வீட்டையே முடிச்சிக் கொடுத் திடுங்க... அங்க குடி வர்ற எல்லாரும்... மூணு மாசத்தில்... ஒண்ணு சொந்த வீடு... இல்ல நிலம் வாங்கிட்டுப் போயிடறாங் களாம்... அந்த ராசி கொஞ்சம் நமக்கும் வொர்க் அவுட் ஆகட்டும்!''

சொல்லிக் கொண்டிருந்தார் வீடு தேடி வந்த செல்வம். ●



## 'சிறுதுளி'யின் சாதனை!

# நொய்யலுக்கு நூறு!

"ஸார்... இன்னிக்கு கோயமுத்தூர் நகரத்தில் நிலத்தடி நீர் மட்டம் பத்தடி. அதற்கு அந்தம்மாதான் காரணம்."

"பருவமழை பொய்த்தால் ஏற்படும் தண்ணீர் கஷ்டத்தை கோவை இனி தைரியமாக எதிர்கொள்ளும். அதற்குக் காரணம் 'அந்தம்மா'தாங்க."

"எங்க ஊர்ல ஓடற ஆறு பற்றி விழிப்புணர்வு ஊட்டி அது பராமரிக்கப்பட வேண்டிய அவசியத்தை உணர்த்தியவர் அந்தம்மாதாங்க."

"எங்க வீட்டு மோட்டார்களில் சிறுதுளியாக வந்துகொண்டிருந்த நிலத்தடி நீர் இன்று பெருவெள்ளமாகப் பொங்கி வருவதற்குக் காரணம் அந்த மேடம்தான். அவங்கதாங்க எங்க ஊர் ஹீரோ (ஹீரோயின்?)"

மேலே உள்ள பாஸிடிவ் ஸ்டேட்மெண்டுகள் எல்லாம் கோவை மக்கள் சொன்னவை. கொஞ்சமும் மிகைப்படுத்தல் இல்லை.

அந்தப் பெண்மணி: **வனிதா மோகன்.**

மழை நீர் சேமிப்பு, நீர் நிலைகள் பராமரிப்பு, தண்ணீரின் சிக்கனப் பயன்பாடு... ஆகியவை குறித்து மக்களின் விழிப்புணர்வைத் தூண்டி, இன்று கோவை மக்களின் ஒட்டுமொத்த அன்புக்குப் பாத்திரமாகிவிட்டது 'சிறுதுளி' என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனம். அந்த நிறுவனத்தின் உந்துசக்தியாக இருப்பவர்தான் வனிதா மோகன். மக்களுக்குத் தண்ணீரின் சிக்கனத்தையும் அதைச் சேமிக்கும் அவசியத்தையும் உணர்த்த 2003-ல் நண்பர்கள் சேர்ந்து தொடங்கியதுதான் 'சிறுதுளி'. இனி வனிதா மோகனே சொல்கிறார்:

"கோயமுத்தூர் நகருக்குத் தண்ணீர் சிறுவாணி அணையிலிருந்துதான் வருகிறது. ஆனால், அந்த அணையில் பல காலம் தூர் எடுக்காமல், தேங்கும் தண்ணீரின் அளவு குறைந்துகொண்டே போனது. அணை கேரள நிலப்பரப்பில் இருப்பதால் அங்கு தூர் எடுக்க ஆயிரத்தெட்டு பிரச்னைகள். ஒரு ஹெக்டேர் பரப்பளவில் 100 மில்லி மீட்டர் மழை பெய்தால் 10 லட்சம் லிட்டர் தண்ணீர் பூமிக்குக் கிடைக்கிறது. ஆனால் தண்ணீரைச் சேமிக்கவேண்டிய குளங்கள், ஆக்கிரமிப்புகளின் காரணமாகவும் தூர் வாராததன் காரணமாகவும் சுருங்கிப் போய்விட்டன. கோவையில் வருடம் ஒன்றுக்கு சராசரி 50 முதல் 60 மில்லி மீட்டர் மழை






• வனிதா மோகன்




பெய்கிறது. மழை நேரத்தில் சாலைகளில் முழங்கால் அளவு வெள்ளம் ஓடுகிறது. ஆனால், அந்தத் தண்ணீர், திசைமாறி ஆவியாகிப் போகிறதே தவிர, மீண்டும் பூமிக்குள் அனுப்பப்படுவதில்லை. எங்கள் ஊரில் ஒரு ஆறு ஓடுகிறது. அதன் பெயர் நொய்யல் என்பதையே பலர் மறந்துவிட்டார்கள். சிறுவாணி மலைப் பகுதியில் துவங்கும் நொய்யல், 160 கிலோ மீட்டர் ஓடி கரூர் மாவட்டத்தில் காவிரியோடு கலக்கிறது. கோவை நகரத்தில் மட்டுமே 30 கிலோ மீட்டர் ஓடுகிறது. இப்படி ஓடும்போது கோவை நகரத்தைச் சுற்றியுள்ள எட்டு குளங்களுக்கும் தண்ணீரை நிறைக்கும் வகையில் நமது முன்னோர்கள் ஏற்பாடு செய்துவிட்டுப் போனார்கள். ஆனால், காலப் போக்கில் குளங்களுக்கு நொய்யல் நீரை எடுத்துச் செல்லும் கால்வாய்கள், ஆக்ரமிப்பினால் அடைபட்டன. குளங்களில் நீர்த் தேக்கம் இல்லாததால் நிலத்தடி நீர் மட்டம் பாதாளத்தில் போனது. இப்படி வருத்தமான சூழல் ஒரு பக்கம் நிலவ, நொய்யல் ஆற்றுக்கே நீர்வரத்து கொடுக்கும் 34 கால்வாய்களும் பயிர் நிலங்களாகவும், தோட்டங்களாகவும் ஆக்ரமிக்கப்பட்டிருந்தன. எனவே நொய்யலிலும் போதிய நீர்வரத்து இல்லை. எல்லா வகையிலும் எதிர்மறையான நிலை. எங்கள் பணி சவால் நிறைந்தது என்பதை உணர்ந்தோம்'' என்று சொல்லி நிறுத்துகிறார் வனிதா மோகன்.

அப்புறம் 'சிறுதுளி' செய்ததுதான் சாதனை சரித்திரம். பெரியநாயக்கன்பாளையத்தில் தூர்ந்துபோய் இருந்த குளம் தூர்வாரப்பட்டுச் சீர் செய்யப்பட்டது. எட்டு குளங்களில் ஆகாயத் தாமரை அகற்றப்பட்டு, தூர் வாரப்பட்டது.

**"நொய்யலுக்கு நீர்வரத்து கொடுக்கும் 34 கால்வாய்களும் தோட்டங்களாக, பயிர் நிலங்களாக ஆக்கிரமிக்கப் பட்டிருந்தன!"**

குளங்களுக்குத் தண்ணீர் எடுத்துவரும் கால்வாய்கள் சீர் செய்யப்பட்டு, தண்ணீர் வரத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

அடுத்து நொய்யலில் கவனம் செலுத்த வேண்டியதை உணர்ந்தார் வனிதா.

'' 'இது நம்ம ஊரு; நம்ம ஆறு' என்ற கோஷத்தை முன் வைத்தோம். மக்களை ஈடுபடுத்தாத எந்தத் திட்டமும் வெற்றி பெறாது. எனவே மக்கள் ஒவ்வொருவரும் நூறு ரூபாய் தந்தால், நொய்யலைப் பராமரிக்க உதவியாக இருக்கும் என்பதைச் சொன்னோம். தவிர மக்களுக்கு நொய்யலைப் பற்றிய விழிப்புணர்வு ஊட்டுவதற்காக ஆறு துவங்கும் இடத்திலிருந்து கோயமுத்தூரின் எல்லை வரை முப்பது கி.மீ. நடைப்பயணம் ஏற்பாடு செய்தோம். சுமார் ஒரு லட்சத்து இருபதாயிரம் பேர் கலந்து கொண்டார்கள்.''



✱ ஜீரோ பட்ஜெட் விவசாயம்...

சேர்த்த பணத்தை என்ன செய்வது என்று யோசித்தனர் சிறுதுளி நிர்வாகிகள். நண்டன்கரை என்ற இடத்தில் ஆற்றுக்குக் குறுக்கே தடுப்பணை கட்டுவதென்று முடிவானது. இந்தச் சந்தர்ப்பத்தில் சிறுதுளியின் எழுச்சியைப் பார்த்து அரசே உதவ முன் வந்தது. அரசு கொடுத்த 66 லட்சம்; சிறுதுளியின் பங்காக 66 லட்சம். தடுப்பணை கட்டி முடிக்கப்பட்டது.

விவசாயிகளுக்கும் தண்ணீர் சிக்கனம் குறித்து அறிவுறுத்துகிறது சிறுதுளி. கர்நாடகத்தில் 'ஜீரோ பட்ஜெட் விவசாயம்' என்று புதிய பாணி பயிர்க்கலாசாரத்தை வெற்றிகரமாக நடத்திக்காட்டிய சுரேஷ் பலேகரை அழைத்து, கோவை விவசாயிகளுக்குப் பயிற்சி கொடுக்கிறார்கள். இது மட்டுமா? வெள்ளலூர் பகுதியில் மாநகராட்சி குப்பைகளைக் கொட்டியதால் ஏற்பட்ட சுகாதாரச் சீர்கேட்டைத் தடுத்து நிறுத்தியிருக்கிறார்கள். சிறுதுளி, Tree Park என்ற திட்டத்தின் கீழ் கோவைச் சிறையில் உள்ள கைதிகளின் மூலம் நாற்றுப் பண்ணைக்கு ஏற்பாடு செய்து ஒரு லட்சம் நாற்றுகளை வளர்த்துக் கொடுக்கச் சொல்லியிருக்கிறார்கள்.

**மக்களை ஈடுபடுத்தாத எந்தத் திட்டமும் வெற்றி பெறாது!**

''இன்னமும் நீண்ட பயணம் காத்திருக்கிறது. இதுவரை சிறுதுளி ஏதாவது செய்திருக்கிறது என்றால் அதற்காக பாராட்டப்படவேண்டியவர்கள் இதில் உள்ளார்ந்த பங்களிப்போடு ஈடுபட்ட ஆயிரக்கணக்கானவர்கள்தான்'' என்று அடக்கத்தோடு சொல்லிக்கொள்கிறார் வனிதா மோகன். சென்னை மக்களுக்கு ஒரு சந்தோஷமான செய்தி. கூவத்தைச் சுத்தப்படுத்த முடியுமா என்று சிறுதுளி அமைப்பைக் கேட்டிருக்கிறார்களாம். இருகரம் நீட்டி சிறுதுளியை வரவேற்போம்.

வாசகர் யோசனை : **ரா.கற்பகம்**

# ப்ரியா வேப்பமரம்...வித்யா புங்கை

## சர்வோஜனா பள்ளி

இந்திய நாடு விடுலை பெறுவதற்கு முன்பு 1922-ல் சர்வோஜனா பள்ளியில் படித்தவர்களே இன்று கோவையின் முக்கியப் புள்ளிகள். ஆங்கிலேயர்கள் ஆட்சிக்காலத்திலேயே தமிழ்வழிக் கல்வியைப் போதித்த பள்ளி இது. இங்கேதான் காலை ப்ரேயரில் வங்கக் கவிஞர் ரவீந்திர நாத் தாகூர் கலந்துகொண்டு, தாம் இயற்றிய தேசியக் கீதத்தைத் தம் வாயால் பாடினார். இங்கே ஒரு நிகழ்ச்சிக்கு வந்த தந்தை பெரியார், பள்ளியின் பாடத்திட்டங்கள், நடைமுறைகள் ஆகியவற்றைக் கேட்டுவிட்டு, குறிப்பு நோட்டில், இந்தப் பள்ளிக்குக் கடவுள் அருள்புரிவாராக என்று எழுதி வைத்திருக்கிறார்! தமிழகத்திலேயே முதல் பெண் உடற்கல்வி ஆசிரியையை வேலையில் அமர்த்தியது இந்தப் பள்ளி தான். இப்பள்ளி கோவை பீளமேடு பகுதியில் இருக்கிறது.



* சர்வோஜனா பள்ளி

## மேட்டுப்பாளையம் வனக் கல்லூரி ஆராய்ச்சி மையம்

மேட்டுப்பாளையம் கோத்தகிரி சாலையில் அமைந்துள்ளது கோவை வனக் கல்லூரி. இங்கு வன ஆராய்ச்சி, விலங்குகள் பாதுகாப்பு, வனம் தொடர்பான படிப்புகள்... ஆகியவை சொல்லித் தரப் படுகின்றன. வனக் கல்லூரியில் பயிற்சி பெற்ற மாணவர்கள் இங்கே டி.எஃப்.ஓ. பயிற்சி பெறுகின்றனர். இதன் மாணவர்கள் ஒருங்கிணைந்து 'ஃபோரஸ்' என்ற அமைப்பை நடத்தி வருகின்றனர். இதன் முக்கிய நோக்கமே இயற்கை ஆர்வலர்களை ஊக்குவிப்பதும், அவர்களின் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருப்பதும்தான். வனம் தொடர்பான அனைத்துச் செய்திகளையும் இங்குள்ள நூலகத்தில் தெரிந்துகொள்ளலாம்.

## திவ்யோதயா பல்சமய உறவு மையம்

நம்மைப் பிரிக்கும் உணர்வுகளைவிட இணைக்கும் உணர்வுகளே மேலானவை என்ற கோட்பாட்டோடு இயங்கி வருகிறது திவ்யோதயா பல்சமய உறவு மையம். மத நல்லிணக்கத்துக்காக இயங்கிவரும் இவ்வமைப்பின் நினைவுத் தூணின் அடிப்பாகம், மழைநீர் சேகரிக்கும் விதமாக அமைந்துள்ளது. பல்வேறு மத நல்லிணக்கங்களும், இலக்கிய நிகழ்வுகளும் அரங்கேறி வருகின்றன. இந்த அமைப்பில் நிரந்தரமாக ஒரு ஓவியக் கண்காட்சி இருப்பது இம்மையத்தின் சிறப்பு. ஆனால், இப்படி ஒரு ஓவியக் கண்காட்சி இருக்கிறது

# மரம்...கதிர் தென்னைமரம்...



நியூஸ் ஏந்தி பவன்



❋ யோகநாதன்

என்பதே கோவை வாசிகள் பலருக்குத் தெரியாது. கோவை ரயில் சந்திப்புக்கு எதிர்புறம் உள்ளது இம்மையம்.

## இயற்கை ஆர்வலர்

கடந்த இருபது ஆண்டுகளில் கிட்டத்தட்ட ஐம்பதாயிரம் மரக்கன்றுகளை நட்டுச் செய்த பசுமைப் புரட்சிக்காக எர்த் மேட்டர்ஸ் ஃபவுண்டேஷன் என்கிற அமைப்பு, 'எக்கோ வாரியர்' விருதை வழங்கிச் சிறப்பித்திருக்கிறது. யாருக்கு? யோகநாதன் என்கிற அரசு பஸ் கண்டக்டருக்கு. இந்த விருதைப் பெறும் முதல் தென்னிந்தியர் யோகநாதன். ''நீலகிரி, தஞ்சாவூர், கோவை... போன்ற மாவட்டங்கள்ல நிறைய மரங்களை நட்டு வெச்சிருக்கேன். பள்ளிக் குழந்தைகளுக்கும் மரம் நடறதைப் பத்தி நிறைய பேசியிருக்கேன். யாரு மரம் நடறாங்களோ அவங்களோட பேரையே மரத்துக்கும் வெச்சுடுவேன். இப்படி வந்ததுதான் ப்ரியா வேப்பமரம். கதிர் தென்னை மரம், வித்யா புங்கை மரம்னு... தமிழ்நாட்டுல ஏகப்பட்ட மரம் இருக்கு. அவங்க பேர் வைக்கறதுனால குழந்தைகளும் மரத்தைப் பத்திரமா பாத்துக்கறாங்க...'' என்கிறார் யோகநாதன்.

## கோவை கிட்ஸ் கிங்டம்..

சாய்பாபா காலனி என்.ஆர்.எஸ். சாலையிலுள்ள கிட்ஸ் கிங்டம் பொழுது போக்குக்குச் சிறந்த இடம். சிறுவர்கள், பெரியவர்களென அனைவரும் விளையாடும் வண்ணம் அனைத்துச் சாதனங்களும் உள்ளன. ரூ 5 முதல் ரூ 20 வரை விளையாட்டுக் கட்டணங்களை வசூலிக்கிறார்கள். குழந்தைகளுக்கான டிபன் ஐட்டங்களும் இங்கு கிடைக்கின்றன. விளையாட்டுப் போட்டிகளில் குழந்தைகளுக்கு இலவசப் பரிசுகளும் உண்டு. பெரியவர்களுக்கு செய்தித்தாள்களும், அமர்ந்து படிக்க நாற்காலிகளும் உண்டு.




✱ மதன்மோகன்

# மல்டிமீடியா பயிற்சியில்

பி.பி.ஓ. பயிற்சியில் மல்ட்டிமீடியா டெவலப்மென்ட் மற்றும் ஈ-பப்ளிஷிங் அடங்கும். யு.எஸ். பேன்ட் டைரக்டரி தயாரிப்பு (வெப் டைரக்டரி, ஆன்லைன் டைரக்டரி), இன்ஃபர்மேஷன் சர்வீசஸ், டேட்டா பேன்ட் மானேஜ்மென்ட் சர்வீசஸ் எல்லாமும் உண்டு.

''இன்ஃபர்மேஷன் சர்வீசஸ் என்பதில் இன்டர்நெட் ரிசர்ச் முக்கிய இடம்பிடிக்கிறது. டெலி-ரிசர்ச் செய்ய வேண்டியது எங்கள் வேலை!'' என்கிறார் மதன் மோகன்.

''உதாரணமாக சியாட்டில் விமான நிலையம் பற்றிய தகவல்கள் ஒருவருக்குத் தேவை என்றால், 'அங்கு தலைமைப் பொறுப்பு வகிப்பவர் யார்? அவருடைய தொலைபேசி எண் என்ன? யாரிடம் விசாரித்தால் முழு விவரங்கள் பெற முடியும்? எத்தனை விமானங்கள், எவ்வப்போது கிளம்பும்? எவ்வெப்போது வரும்? எங்கிருந்து



✱ ஆரிஃப்



✱ கோவிந்த்

மதன்மோகன், பிரதீப், ராஜ்கிருஷ்ணன் என்ற மூவர் கூட்டணியில் இயங்கி வரும் 'ஆட்டம் மல்ட்டிமீடியா' நிறுவனத்தில் பயிற்சி அளிக்கும் ஆசிரியர்களில், ஒருவர் ஆரிஃப். இன்னொருவர் கோவிந்த். இருவருமே இளைஞர்கள். ஆரிஃப் சேலத்தைச் சேர்ந்தவர், பி.சி.ஏ. படித்தவர். கோவிந்த் தேனிக்காரர். ஜவுளி வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தவர். மல்ட்டிமீடியாவில் நல்ல எதிர்காலம் இருக்கிறது என்று நண்பர் ஒருவர் சொல்ல, பயிற்சிக்காக வந்து சேர்ந்தவர். மூன்று மாத வெப்

வரும்? எங்கெங்கே போகும்?' என்று அத்தனை தகவல்களையும், அவருடைய சொந்தத் தொலைபேசி எண் உட்பட, பெற்றுவிடலாம். இரவில்தான் டெலி-ரிசர்ச் பண்ணுவோம். எந்த வாடிக்கையாளருக்காக (கிளையன்ட்) இந்த விவரங்கள் தேவைப்படுகின்றன என்று சொல்லிவிடுவோம்.

இப்போது 15 பேர் பி.பி.ஓ. துறையில் எங்களிடம் பணிபுரிகிறார்கள்! இங்கே இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம் - 'டீம் லீடர்' என்ற 'கான்செப்'டே கிடையாது. அவர்களுக்கு அவர்கள் வேலையைச் செய்ய முழு சுதந்திரம் கொடுத்து விடுகிறோம். அப்போது

# ஒரு புரட்சி




அவர்கள் சிறப்பாகப் பணிபுரிகிறார்கள். நாங்கள் அவர்களை 'மானிட்டர்' செய்ய வேண்டிய அவசியமே எழுவதில்லை!'' என்கிறார் மதன்மோகன்.

**இன்னொரு பிரிவு: மனிதவளத் துறை.**

''ஹெச்.ஆர். மாணவர்களுக்கும், 2-3 வருட அனுபவம் உள்ள இளம் மானேஜர்களுக்கும் பயிற்சி. மாணவர்களுக்கு கேரியர் டெவலப்மென்ட்டில் பயிற்சிப் பட்டறை வகுப்புகள் நடைபெறுகின்றன.

டைம் மானேஜ்மென்ட், ஸெல்ஃப் இம்ப்ரூவ்மென்ட், ஸெல்ஃப் டெவலப்மென்ட், டீம்-பில்டிங் எல்லாம் இவர்கள் லட்சியம். இதற்கான பயிற்சிகளை அளிக்கிறார்கள். மாணவர்களுக்குத் தனிப்பட்ட கோர்ஸ்கள்.

'நாளைக்கு எனக்கு ஒரு கான்ஃபரன்ஸ் அட்டெண்ட் பண்ணணும். அங்கே நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?' என்று ஒரு மாணவர் வந்து கேட்டால், அவருக்கு அதற்கான தனிப் பயிற்சி அளிப்போம்!

வேலைக்கான பயிற்சி என்பது எங்கள் நிறுவனத்தில் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது. எந்தெந்தத் துறையில் பயிற்சி பெற வேண்டுமோ அந்தந்தத் துறையிலிருந்து நிபுணர்கள் வந்து பேசுவது வித்தியாசமான அனுபவமாக அமைகிறது.

ஆட்டோமொபைல் என்றால் ஃபோர்டு நிறுவனத்திலிருந்து, சப்ளை செயின் மானேஜ்மென்ட் என்றால் டிஹெச்எல். சிஸ்டம் என்றால் 'விப்ரோ' அல்லது இன்ஃபோஸிஸ். பிரான்ட் மானேஜ்மென்ட் என்றால் ஐடிசி. பெண்களுக்குத் தனி ட்ரெயினிங் டீம்...

நாங்கள் ஓர் அடி முன்னே இருக்கிறோம் என்றால், துறைக்குப் பொருத்தமான

*டிசைனிங் கோர்ஸில் நிறைய மார்க் எடுத்தார். மதன்மோகன் கேட்டுக் கொண்டதும், இங்கேயே வேலைக்கும் சேர்ந்துவிட்டார்!*

*''எதிர்கால இந்தியாவின் இளைஞர்களை உருவாக்குகிறோம் என்று ரொம்ப மகிழ்ச்சியா இருக்கு இங்கே வேலை செய்ய!'' என்கின்றனர் இருவருமே.*

குறிப்பிட்ட பயிற்சியை அளிப்பதுதான் காரணம். இதை ஸெக்டார் ஸ்பெசிஃபிக் கான்செப்ட் என்கிறோம். எங்களிடமே ட்ரெயினர்கள், கன்டென்ட் டெவலப்பர்ஸ் இருக்கிறார்கள். அவர்கள் சர்வே செய்து தகவல் திரட்டுவார்கள். இதையும் ஒருவகை R&D என்று சொல்லலாம். அவர்கள்தான் இன்டஸ்ட்ரியில் எப்படிப்பட்ட தேவை இருக்கிறது எனத் தெரிந்து கொண்டு வருகிறார்கள்.

வருடத்தில் எந்தெந்த மாதம், தேதி, இன்டஸ்ட்ரி நிறுவனங்களுக்கு ஏற்றதாக இருக்கிறது என்பதை முன்கூட்டியே காலண்டர் தயாரித்து விடுவோம். ஒவ்வொரு நிறுவனமும் தனிப்பட்ட வகுப்பு எடுக்க, 'ஆட்டம் மல்ட்டி மீடியா'விற்கு வருகிறார்கள். அந்த வகையில் நாங்கள் ரொம்பவும் புரொஃபஷனலாகச் செயல்படுகிறோம்!

இப்போது எம்.பி.ஏ. கற்பிக்கும் கல்வியமைப்புகளைக் குறிவைத்திருக்கிறது எங்கள் 'ஆட்டம் மல்ட்டி மீடியா'. நாற்பது மையங்கள் கோவையில் மட்டுமே இருக்கின்றன. பாளையங்கோட்டையிலிருந்து கூட எங்களுக்கு விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன!'' என்கிறார் மதன்மோகன் பெருமையுடன். மல்ட்டிமீடியா பயிற்சித் துறையில் ஒரு புரட்சியே செய்து வருகிறது ஆட்டம் சிஸ்டம்.

- சாருகேசி

**"இங்கே இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம் 'டீம் லீடர்' என்ற கான்செப்டே கிடையாது. அவர்களுக்கு அவர்கள் வேலையைச் செய்ய முழு சுதந்திரம் கொடுத்து விடுகிறோம்."**



இளைஞர் மதன்மோகனிடம் நீங்கள் பேச வேண்டுமா? இதோ மொபைல் எண்: 97915 99900 அல்லது 0422-252 6662. 'வெப்'பில் பார்க்க : www.atomedu.com

நேரில் சந்திக்க: நடேஷ் காம்ப்ளெக்ஸ், 456-462, நூறு அடி சாலை, காந்திபுரம், கோயமுத்தூர் - 641 012.

# விமானத்தில் பறக்கும் இளநீர்!



உங்களுக்கு முதலில் ஒரு கேள்வி. இளநீரை சர், சர்ரென்று சீவிவிட்டு, திறந்தபடி வைத்தால், எத்தனை நேரம் கெட்டுப் போகாமல் இருக்கும்?

விடையைத் தேடி எங்கும் அலைய வேண்டாம். எட்டு மணி நேரம்தான் சரியான விடை. இந்த இளநீரை ஒரு வருடம் வரை கெடாமல் பாதுகாத்துக் குடிக்க முடியுமா? இந்தக் கேள்வி மண்டையைக் குடைந்ததனால், ஆராய்ச்சியில் குதித்தார் பொள்ளாச்சி தொழில் அதிபர் காம்ராஜ். இரண்டு, மூன்று வருட அலைச்சல் ப்ளஸ் ஆராய்ச்சிக்குப் பிறகு டெட்ராபேக்கில் இளநீரைக் கொண்டு வந்துவிட்டார். இளநீரை இன்று வளைகுடா நாடுகள், தென் ஆப்பிரிக்கா மற்றும் நியூசிலாந்து நாடுகளில் மார்க்கெட் செய்கிறது காம்ராஜின் சக்தி கொகோ நிறுவனம். நமது நாட்டிலேயே தில்லி மற்றும் மும்பையில் கூட இந்த பாக்கேஜ்ட் இளநீர் கிடைக்கிறது. இந்தத் தொழில் நுட்பம் கைவசமாவதற்கு காம்ராஜ் செலவழித்த தொகை இரண்டு கோடியாம். இந்த முயற்சியில் பல்வேறு கட்டங்களில் பின்னடைவைச் சந்தித்த போதும், முடிவில் சாதித்து விட்டார் காம்ராஜ். பொள்ளாச்சியில் அவரைச் சந்தித்தோம்.

''நமது தமிழ்நாட்டில் வருடத்துக்கு 40 கோடி தேங்காய்கள் கிடைக்கின்றன. இதில் 40 சதவிகிதம் சமையலுக்குப் பயன்படுகிறது. 45 சதவிகிதம் சமையல் எண்ணெய்க்காகப் பயன்படுகிறது. மீதி 15 சதவிகிதம் இளநீராகப் பயன்படுத்தப்படுகிறது. இளநீரின் எடை காரணமாக தில்லி போன்ற தூர இடங்களுக்கு அனுப்புவதற்கு போக்குவரத்துச் செலவு அதிகம். எனவே, அதுபோன்ற இடங்களில் இளநீரின் விலையும் அதிகம். எனவேதான் கெடாமல் பாதுகாத்து இளநீரைக் குடிக்க முடியுமா என்ற ஆராய்ச்சியில் இறங்கினேன். எனக்கு ராணுவ உணவு ஆராய்ச்சி நிலையமும், தேங்காய் வளர்ச்சி வாரியமும், நிறையவே உதவி செய்தன.''

**சந்தித்த சவால்கள்?**

''எதைச் சொல்வது? எதை விடுவது? பொள்ளாச்சி பகுதி தென்னை வளம் நிறைந்த பகுதி. ஆனால் இங்கே இப்போது மரம் ஏற ஆள் கிடைப்பதில்லை. எனவே, முன்கூட்டியே திட்டமிட்டு இளநீரைத் தருவித்து ஸ்டாக் வைக்க வேண்டியிருக்கிறது. இளநீரை வெளிப்புறத்தில் நன்கு சுத்தப்படுத்தி விட்டுத்தான் சீவி பாக்கிங் செய்முறையைத் தொடங்குவோம். கூடியவரையில் கைகளைப் பயன்படுத்தாமல் 99 சதவிகிதம் இயந்திரங்களைப் பயன்படுத்துகிறோம். நாங்கள் பயன்படுத்துவது இயற்கையான பதப்படுத்தும் பொருள் (Preservative). ஒரு வருடம்

* காம்ராஜ்



ஆகியவற்றிலிருந்து பல் வேறு வீட்டு உபயோகப் பொருட்கள், அலங்காரப் பொருட்கள், கைவினைப் பொருட்கள் ஆகியவற்றைச் செய்து கோடிக்கணக்கில் ஏற்றுமதி செய்கிறார். இவ ரது தயாரிப்புகளான தேங் காய் பவுடர், தேங்காய் பால் பவுடர் ஆகியவை சமையலில் ரெடிமேட் உப யோகத்துக்கு ஏற்றவை.

'''டெட்ராபேக்' இளநீர் உற்பத்திக்கான உரிமம் பெறுவதற்குக் கூட மிகவும் போராட வேண்டியதாகி விட்டது. இதற்கு 12 சதவிகி தம் 'வாட்' வரியைப் போட்டுவிட்டார்கள். கடு மையாகப் போராடி அதை நீக்கினோம்'' என்கிறார்.

கழித்துக் குடிக்கும் போதும் இளநீரின் சுவையோ, நிறமோ மாறாது. உடலுக்கு எந்தக் கெடுதலும் வராது. வெளிநாட்டு மார்க்கெட் டில் எங்களுக்குப் பலத்த போட்டியாக வியட்நாம், தாய்லாந்து ஆகிய நாடுகள் இருக்கின்றன. உள்நாட்டி லேயே, கொஞ்சம் அதிக விலைக்குத்தான் விற்க முடிகிறது. உற்பத்திச் செலவு அதிகம். ஆயினும் நம் நாட்டில் சகாய விலைக்கு விற்பதே எங்கள் நோக்கம்.''

**எம்.பி.ஏ.** பட்டதாரி யான காம்ராஜை 'தென்னை ராஜா' என்று கூட அழைக்க லாம்! தென்னை நார் மற்றும் தேங்காய் உமி,

பலமுறை சிறந்த தொழிலதிபர் விருதை வாங்கியிருக் கிறார். மத்திய அரசின் கயிறு வாரியம் மற்றும் தென்னை வளர்ச்சி வாரியத்தின் 'சுறுசுறு' உறுப்பினர் இவர். ''எனது வெற்றிக்கு உந்துசக்தியாக இருந்து உற்சாகத் தைக் கொடுத்தவர் தொழிலதிபர் நா.மகாலிங்கம்'' என்று சொல்கிறார் காம்ராஜ். ●

### இதயத்துக்கு இதம்

''இளநீரில் உள்ள L.Arginine மற்றும் மக்னீஷியம், பொட்டாஷியம், வைட்டமின் சி ஆகியவை இதயத்தைப் பாது காத்து சீராக இயங்க வைக்க உதவுபவை. தொடர்ந்து இளநீர் குடிப்பவர்களுக்கு ஹார்ட் அட்டாக் ரிஸ்க் குறைவு. இதுதவிர, சிறுநீரகக் கோளாறுகள், சிறுநீர்ப் பாதை யில் கல் ஆகிய பிரச்னைகளுக்குக் கூட நிவாரணம் தரும் குணம் இளநீருக்கு உண்டு. இளநீரில் கொலஸ்ட்ரால் கிடையாது. சர்க்கரை குறைபாடு உள்ளவர் களும் தேங்காய்ப் பதம் இளசாக இருக் கும் இளநீர் அருந்தலாம்'' என்று டிப்ஸ் கொடுக்கிறார் காம்ராஜ்.



# கண்களைக் காக்க ஒரு கனவு மருத்துவமனை!




அயல்நாட்டு கண் மருத்துவ மாநாடுகளில் கலந்து கொண்டு பேச, வந்திருக்கும் அழைப்புகளை ஏற்று, புறப்படத் தயாராக இருந்த டாக்டர் டி.ராமமூர்த்தியை, கோவை ஆர்.எஸ்.புரம் ஐ ஃபவுண்டேஷனில் சந்திக்கிறோம்.

வெளி மாநிலம் ஒன்றில் கண் மருத்துவமனை நடத்தி வரும் கண் மருத்துவ நண்பர் ஒருவரை அறிமுகம் செய்து வைத்துவிட்டு, அவரைத் தம் மருத்துவமனையைச் சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய்துவிட்டு நம்மிடம் வருகிறார் டாக்டர் ராமமூர்த்தி.



✱ டாக்டர் ராமமூர்த்தி

“ஐ பவுண்டேஷனில் எப்படி சிகிச்சை அளிக்கப்படுகிறது என்று கல்கியில் ஒரு தனி சப்ளிமெண்ட்டே தயாரித்திருக்கிறீர்கள். இருந்தாலும் சில வார்த்தைகள். எங்களின் முழுக் கவனமும் கண் பராமரிப்பு, பாதுகாப்பு என்ற துறையில் இருந்து வருகிறது. ஆனால், அதை ஏனோ தானோ என்றும், வணிக நோக்கோடு மட்டும் செய்யாமல், கருணைப் பார்வையோடு செய்து வருகிறோம். 'கம்பேஷனேட்டச்' என்பார்களே, அதுதான் கண் நோயாளிகள் எங்களைத் தேடி வருவதற்குக் காரணமாக இருக்கிறது.

வந்தவர்களுக்கு மிக நவீன வசதிகளுடன் மருத்துவம் பார்க்க வேண்டுமல்லவா? அதனால்தான் விலையுயர்ந்த நவீன கண் மருத்துவக் கருவிகளை இங்கே கொண்டுவந்து, 'ஸ்டேட் ஆஃப் த ஆர்ட்' வசதி என்கிறார்களே, அதை இங்கே அளிக்கிறோம். எங்கள் சேவை சமுதாயத்தின் எல்லா வகை மக்களையும் சென்றடையும் வகையில் அமைந்திருக்கிறது. இலவச கண் சிகிச்சை மையம் ஒன்றைத் தனியே நடத்தி வருகிறோம்.

**கோவை:**
0422-2544242 / 43,
4366634 / 44

**திருப்பூர் :**
0421 - 2232333 / 34

*கண் மருத்துவத் துறையில் ஈடுபட்டிருக்கும் அத்தனை மருத்துவர்களும் இணைந்த அமைப்புதான் ஆல் இந்தியா ஆஃப்தால்மலாஜிகல் சொஸைடி. அதன் அறிவியல் பிரிவின் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் டாக்டர் டி.ராமமூர்த்தி.*

*''உலகிலேயே அதிகபட்ச உறுப்பினர்கள்*

கிட்டப் பார்வை, தூரப் பார்வைக் குறைபாடுகளுக்கு லாசிக் சையாப்டிக்ஸ் முறையை அறிமுகம் செய்தோம். இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் சுமார் 24000 லாசிக் - சையாப்டிக்ஸ் சிகிச்சைகள் இங்கே நடந்திருக்கின்றன! இதற்குப் பிறகு இன்ட்ராலேஸ் என்ற அதி நவீன சிகிச்சையை அறிமுகம் செய்தோம். பிளேடு பயன்படுத்தாமல், நூறு சதவிகிதம் லேசர் சிகிச்சை இது என்பதால், லாசிக் சிகிச்சை முறையை மேலும் பாதுகாப்பானதாக ஆக்கியிருக்கிறது. அமெரிக்காவில் இப்போது இன்ட்ரா லேஸ் வகை சிகிச்சைதான் பெரும்பான்மையாக நடத்தப்படுகிறது.

இன்ட்ராலேஸ் சிகிச்சை பெற்றவர் உடனடியாகப் பார்க்க முடியும் என்பதோடு, சில மணி நேரங்களிலேயே மேலும் முன்னேற்றம் காணலாம். இந்தப் பகுதியிலேயே இன்ட்ராலேஸ் சிகிச்சையை முதன்முதலாக அறிமுகப்படுத்திய பெருமை எங்களுக்கு உண்டு.

காடராக்ட் அறுவைச் சிகிச்சையிலும் ஐ ஃபவுண்டேஷன் சிறப்பான சேவை செய்திருக்கிறது. ஃபோக்கிங் ஐ.ஓ.எல்., மல்ட்டி ஃபோக்கல் ஐ.ஓ.எல். என்று நோயாளியின் தேவைக்கு ஏற்றவாறு முடிவு செய்து பொருத்த, லென்சுகள் இருக்கின்றன. ஆசியா-பசிபிக் பகுதியிலேயே, அதிகபட்ச மல்ட்டி ஃபோகல் இன்ட்ரா ஆக்யுலர் லென்ஸ் பொருத்தியவர்கள் என்ற சாதனை, எங்களின் இன்னோர் அடையாளம். ஏன், நாட்டிலேயே முதன்முதல் ஃபேக்கிங் ஐ.ஓ.எல். சிகிச்சை அளித்த பெருமையும் எங்களுக்கு உண்டு!

* அறுவை சிகிச்சையின் போது...



திருப்பூரிலும் எங்களது ஐ ஃபவுண்டேஷன் அந்தப் பகுதி மக்களுக்காக இயங்கி வருகிறது. இதே தரம் மிக்க சிகிச்சை அங்கும் அளிக்கப்படுகிறது.

*- அதாவது 12000 பேர் உள்ள மிகப் பெரிய அமைப்பு இது. இதன் சயன்டிஃபிக் கமிட்டிக்கு சேர்மன் பொறுப்பு வகிப்பது மிக கௌரவமானது. ஆனால், சவால் மிகுந்தது. ஆராய்ச்சிகள் பற்றியும், சிகிச்சை முறைகள் பற்றியும் அவ்வப்போது வெளியிடப்படும் அறிக்கைகள், தகவல்கள் எல்லாம் வெகு முக்கியமானவை. இந்தப் பொறுப்பை நான் சென்ற ஆண்டு ஏற்றுக் கொண்டேன். மூன்று ஆண்டுகளுக்கான கௌரவ பதவி இது!'' என்கிறார் டாக்டர் ராமமூர்த்தி.*

,,

**ஐ ஃபவுண்டேஷன் வளாகத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்த வெளி மாநில கண் மருத்துவர், "உலகத் தரம் வாய்ந்த கண் மருத்துவமனையாக உருவாக்கியிருக்கிறீர்கள். உங்கள் 'விஷனு'க்குப் பாராட்டுக்கள்!'' என்றார் டாக்டர் ராமமூர்த்திமிடம். நாமும் ஆமோதிக்கிறோம்.**

**- சாருகேசி**




**மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் கோவை - சிறுவாணி சாலையில், ''வெள்ளியங்கிரி ஆண்டவருக்கு அரோகரா'' என்ற கோஷத்துடன் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வெள்ளியங்கிரி மலைக்கு புனிதப் பயணம் மேற்கொள்கிறார்கள். வாருங்கள்... அவர்களோடு நாமும் சேர்ந்து கொள்ளலாம்.**

- கயிலாயத்தில் இருந்த சிவ பெருமானை கைப்பிடிக்க குமரி முனையில் தவமிருந்தாள் தேவி பராசக்தி. ஒரு விடியல் பொழுதில் முகூர்த்த நேரத்தைக் குறித்து, அதற்குள் ஈசன் தன்னை மணம் செய்து கொள்ளாவிட்டால், உடலை நீப்பதென்று உறுதிகொண்டிருந்தாள்.
- ஆனால் தேவர்கள் இந்தத் திருமணம் நடக்கக்கூடாதென்று திட்டம் போட்டனர். தேவியின் கடுந்தவத்தால் மனமிரங்கிய ஈசன் குமரியை நோக்கி பயணத்தைத் துவக்கினார். இடையில் சுசீந்திரத்தை அடையும்போதே சேவல் கூவ... அட பொழுது விடிந்துவிட்டது! எல்லாம் தேவர்களின் சதி.
- சிவபெருமான் குறித்த நேரத்தில் வராததால் உடலை உதறி மஹா சமாதியடைந்தாள் பராசக்தி. அன்று முதல் அந்தப் பூமி கன்னியாகுமரி ஆயிற்று. தேவர்களின் சதியைப் புரிந்து கொண்ட சிவபெருமான், மிக்க வருத்தத்தோடு, தென்னகமெங்கும் இலக்கற்று சுற்றி, பின்னர் வந்தமர்ந்த மலைதான் வெள்ளியங்கிரி. ஈசன் அமர்ந்த இடமாதலால் தென் கயிலாயம்.
- வெள்ளியங்கிரி ஏழு மலைகளைக் கொண்டது. அடிவாரத்தில் இருக்கிறார் விநாயகர். அடிவாரத்துக்கு 'பூண்டி' என்று பெயர். விழாக் கோலம் பூண்டு விடுகிறது அடிவாரம். கிராமியக் கலைக் கோஷ்டிகள் மேளம், பறையோடு பின்னி எடுக்கிறார்கள். கிளி ஜோசியத்துக்குப் போட்டியாக வெள்ளை எலி ஜோசியம். காலடிகள் வரி




# வெள்ளியங்கிரி

சையாக மலை ஏறுகின்றன.

- பூண்டி விநாயகரைத் துதித்து, பின்னர் வெள்ளியங்கிரி ஆண்டவரையும், உடனுறை மனோன்மணி அம்மனையும் வழிபட்டு மலைப் பயணத்தைத் துவக்கு கிறார்கள் பக்தகோடிகள். மலைப்பாதை யில் சிரமம் தெரியாமல் போவதற்கு விடியற்காலை சரியான நேரம். துணைக்கு ஈசன் நம்மோடு வருவார் என்றாலும், உடல் களைப்பு தெரியாமல் இருக்க, ஊன்றி நடக்க மூங்கில் கழி இருந்தால் நல்லது.

- வெள்ளியங்கிரி 6000 அடி உயரம். ஏழு மலைகளும், உடலிலுள்ள ஏழு சக் கரங்களைக் குறிப்பதாகச் சொல்கிறார்கள். செங்குத்தான பாதையைக் கொண்டது முதல் மலை. திருப்பதி மலையில் காளி கோபுரத்தை அடைய எப்படிச் சிரமப் படுகிறோமோ, கிட்டத்தட்ட அதே சிர மத்தை முதல் மலையிலும் பக்தர்கள் சந்திக்கிறார்கள். ஆனால், அப்படி ஏறி வந்தவர்களை ஆசுவாசப்படுத்துவது போல் முதல் மலை முடிவில் வெள்ளை பிள்ளையார் அமர்ந்திருக்கிறார்.

- இருபுறமும் உயர்ந்த மரங்கள் அணி வகுக்க காட்டுக்கே உரிய அமைதி இறங்க, மனதில் திக்... திக்குடன் இரண்டாவது மலையில் பயணத்தைத் தொடர்கிறோம். விழாக் காலங்கள் தவிர மற்ற காலங்களில் மலையேறுவோர், காட்டு மிருகங்களின் ஆபத்திலிருந்து தப்பிக்க விழிப்புணர் வோடு இருக்க வேண்டும். இரண்டாவது மலைப் பயணம் வழுக்குப் பாறையோடு முடிகிறது.

- மூன்றாவது மலைப் பயணம் ஒரு சுனையோடு துவங்குகிறது. இதற்கு கை தட்டிச் சுனை என்று பெயர். இந்த சுனைப் பகுதியில் சித்தர்கள் நடமாட்டம் அதிக மாக இருக்கும் என்றும், அவர்களைத் தொந்தரவு செய்யக் கூடாது என்பதற் காக பக்தர்கள் கைதட்டி வருகையைத் தெரிவித்த தால், இந்தச் சுனைக்குக் கைதட்டிச் சுனை என் றும் பெயர் வந்திருக்க லாம் என்கிறார்கள்.




**வெள்ளியங்கிரியின் ஏழு மலைகளும் உடலிலுள்ள ஏழு சக்கரங்களைக் குறிப்பதாகச் சொல்கிறார்கள்!**



இந்த மணலைத் திருநீறாகவே எடுத்துச் செல்கிறார்கள்.

● ஏழாவது மலையில் சுயம்புலிங்கமாகக் காட்சி யளிக்கிறார் பஞ்சலிங்கேஸ் வரர். அவரது அருள் பார்வை யில் மலையேறிய



✱ பீமன் களியுருண்டை மலை

மூன்றாவது மலை முடிவில் பாம்பாட்டி சுனையும் இருக் கிறது.

● நான்காவது மலை சம தளத்தில் இருப்பதால் நடந்து போக எளிதாக இருக்கிறது. இங்கே ஒட்டர் என்ற சித்தர் சமாதி அடைந்திருக்கிறார். உட லைத் தழுவிச் செல்லும் ஜில் காற்று புத்துணர்வைக் கொடுக் கிறது.

● ஐந்தாவது மலைக்கு பீமன் களியுருண்டை மலை என்ற பெயரும் உண்டு. பஞ்சபாண்டவர்கள் இங்கே தவ வாழ்க்கையில் ஈடுபட்டதாகச் சொல் வதற்கு ஆதாரமாக அர்ச்சுனன் தவப்பாறை என்ற இடம் இருக்கிறது.

● ஐந்து மலைகள் ஏற்ற இறக்கம் கொண்டதாய், ஒன்றோடு ஒன்று நெருக்க மாய் அமைந்திருக்கின்றன. ஆறாவது மலை சரிவாகக் கீழ்நோக்கி இறங்கக் கூடியது. இங்கும் சுவையான நீரைக் கொடுக்கும் ஆண்டி சுனை உண்டு. இந்தச் சுனையில், குளித்து எழுவது உற்சாகமான அனுபவம். இங்கு கிடைக்கும் வெள்ளை மணல், பக்தர்கள் நெற்றியில் திருநீறாக மாறுகிறது. பக்தர்கள் தங்கள் வீடுகளுக்கு

பஞ்சபாண்டவர்கள் இங்கே தவ வாழ்க்கையில் ஈடுபட்டதாகச் சொல்கிறார்கள்.

சிரமமும், அசதியும் நம்மைவிட்டு அகல ஒரு நிறைவான எண்ணமும், புத்துணர் வும் நம்மை ஒட்டிக் கொள்கின்றன. உயரே வானத்தைத் தொட்டுவிடலாமா என்று குதித்துப் பார்க்கிறோம். கடுங் காற்று வீசும் இந்தப் பகுதி, சக்தி நிலையின் பெரும் அதிர்வுகள் நிரம்பிய இடமாக இருப்பதாக யோக, தியான அன்பர்கள் சொல்கிறார்கள்.

● பருவமடையாத சிறுமிகளும், மாதவிலக்கு நின்ற பெண்களுமே மலை யேற அனுமதி!

## மாறுமா இந்த நிலை?

தமிழ்நாட்டில் சென்னைக்கு அடுத்து அதிக வருமானம் தரும் ரயில் நிலையம் கோவை. இருந்தும் போதிய வசதிகள் கிடையாது. ரயில் நிலையத்தின் முன் பார்த்தால், எஸ்.டி.டி. பூத்கள், கோயில், கட்சி போஸ்டர்கள், போலீஸ் நிலையம்... என ஏகப்பட்ட ஆக்கிரமிப்புகள். ரயில் நிலையத்தின் முன் பகுதி ஹாலில், ஒய்வெடுக்க ஒரு நாற்காலிகூட கிடையாது. அவசரத்துக்கு ஒரே ஒரு டாய்லெட். அதற்கு வரிசையில்தான் செல்லணும்! ரயில் நிலையம் முன்பு உள்ள ஆக்கிரமிப்புகள் அகற்றப்பட்டால், ரயிலிலிருந்து இறங்கி வரும் அல்லது ரயில் நிலையத்துக்குள் புகும் பயணிகளுக்கு வசதியாக இருக்கும். இதை உரிய அதிகாரிகள் கவனத்தில் கொள்வார்களா?



# பெட்டிஷன் பாக்ஸ்

## பட்டீஸ்வரருக்குப் பாராமுகம்!

கோவை நகரத்திலிருந்து சுமார் 5 கி.மீ. தூரத்திலுள்ள பேரூர் ஒரு புண்ணியதலம். இங்கு பட்டீஸ்வரர் கோயில் அமைந்துள்ளது. இதன் அருகில் நொய்யல் நதி ஓடுகிறது. பெரும்பாலான காலங்களில் தண்ணீர் இருக்காது. இதன் கரையில் ஒரு தோப்பில் இறந்தவர்களுக்கான சடங்குகள் புரோகிதர்களால் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு மட்டை சாலையின் கீழ்தான் புரோகிதர்கள் சடங்குகள் செய்கின்றனர். சிமெண்ட்டால் ஆன மேடைகள் கிடையாது. தண்ணீர் வசதி, டாய்லெட் வசதி, குளியல் வசதி இவை போதிய அளவுக்கு இல்லை. ஏதோ ஒரு சிறு பக்கெட் தண்ணீரை விலைக்கு வாங்கிக் குளித்துவிட்டு, சடங்கு செய்ய இறந்தவர்களின் வாரிசுகள் உட்காருவர். பெண்கள் துணிமாற்ற போதிய வசதி கிடையாது. இத்தொகுதிக்கு எத்தனையோ எம்.எல்.ஏ.க்கள் இருந்துள்ளனர். பட்டீஸ்வரரைப் பாராமுகமாகவே நடத்துகின்றனர்.



- ஆர்.நாராயணசாமி,கோவை.

# இயற்கையின் மடியில் உதயமாகிறது இனிய இல்லங்கள்



கோவை பிராப்பர்ட்டி சென்டர், வாடிக்கையாளர்களின் கனவுகளையும், கலை நுணுக்கங்களையும் தெளிவாக உணர்ந்து இல்லங்களை வடிவமைக்கும் கட்டிடக்கலை நிபுணத்துவம் பெற்றவர்கள்.

எங்கள் படைப்புகள் இயற்கை சூழலில் அமைந்தவை. எங்கள் நோக்கமும், பாரம்பரியமும் வாடிக்கையாளர்களால் போற்றப்பட்டுவந்தவை. மேலும் எங்கள் படைப்புகளான அபார்ட்மெண்ட்கள், வியாபார கட்டிடங்கள், ஓய்வுகால குடியிருப்புகள் போன்றவை அழகு மிளிரும் அடையாளச் சின்னங்கள் கோவையில் நிலையான அடையாளத்தை உருவாக்கி வாடிக்கையாளர்களின் இதயத்தில் இடம் பிடித்துள்ளது.

## COMFORT & RETIREMENT HOMES



கோவை பிராப்பர்ட்டி சென்டர், சௌந்தர்யம், சந்தோஷம் மற்றும் செண்பகம் எஸ்டேட்ஸ் ஆகிய ஒருங்கிணைந்த ஓய்வுகால குடியிருப்புகளை உலகத்தரத்திற்கு ஏற்ப அனைத்து அடிப்படை வசதிகளுடன் அமைத்து தனக்கென்று ஒரு தனி முத்திரையை பதித்துள்ளது.

**Soundaryam** is self-contained with all infrastructure including black topped roads, sewage treatment and recycling plant, water softening plant, drainage, electricity including UPS/Stand by Generator, 24X7 security, a modern Recreation Centre with a lounge, dining room, modern kitchen with steam cooking arrangements, a medical centre with ambulance and emergency medical facilities, shopping centre, Solar Street Lights, Open Air Theatre, Activity Centre etc. Besides, one will get the services of house maids, gardener, transport arrangements etc.

**Soundaryam Extension**, as the name suggests, is the extension of Soundaryam Comfort and Retirement Homes and will have **37 villas** ranging from 1000 to 1600 sq ft. These are two/three bedroom villas, exquisitely designed to meet the requirements of senior citizens. The common amenities of Soundaryam will be shared by these residents.

## COMMERCIAL COMPLEX

**ACHAL'S**
A R C A D E

**ACHAL'S ARCADE** is a commercial complex of our Gated Community Project named GEM Nirmaalayam at Ganapathy, Coimbatore. It has independent access for other neighbouring locality people to enter and exit.



**Salient Features:**

- In the midst of residential localities. No other commercial complex in the vicinity
- KGISL SEZ at Saravanampatty only 5 Kms away. Large number of residents work in KGISL SEZ live in GEM Nirmaalayam
- 15 mins to reach Avinashi Road, 3 kms from Gandhipuram
- Four floors with each Floor about 3700 sq ft
- Ideal for Offices (Walk to Work), Back Offices, Departmenta Store, Bank, BPO, Poly Clinic, Educational Institutions etc

**வேதம் என்க்ளேவ்,** ஒண்டிப்புதூர் - கோவை பிராப்பர்ட்டி சென்டரின் மற்றுமொரு அடையாளச் சின்னம். கோவையில் உங்களுக்கு நவீன அடுக்குமாடி குடியிருப்புகளை எவரும் தர முடியாத வகையில் குறைந்த விலையில் வழங்குகிறது.

- 2 பிளாக்குகளில் அமைந்த 72 அடுக்குமாடி குடியிருப்புகள்
- 990 - 1405 சதுர அடிகள் வரையிலான 2 மற்றும் 3 படுக்கை அறைகள், சமையலறை மற்றும் ஹால்.
- கோவை மாநகராட்சி எல்லைக்குட்பட்டது.

VEDAM

## APARTMENT COMPLEX





## SURABI
Waterfront

சுரபி - அடுக்குமாடி குடியிருப்புகள் 3 படுக்கை அறைகளுடன் கூடிய 52 தனி வீடுகளாக கண்ணை கவரும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

கோவையின் மையப்பகுதியில் அமைந்துள்ள **திருச்சி சாலை வழியாக ரேஸ்கோர்ஸில் இருந்து** 500 மீட்டர் மற்றும் **ரயில்நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும்,** ஆடம்பர மற்றும் வசதியான வாழ்க்கை முறைக்கு **சுரபி** உங்களை வரவேற்கிறது. அமைதியான சூழலில் பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள், பல்பொருள் அங்காடிகள், உணவு விடுதிகள் மற்றும் வங்கிகளும் அருகாமையில் அமைந்துள்ளது.

மேலான சிறப்பம்சங்கள், தரமான இடுபொருட்களுடன் கூடிய கட்டிட அமைப்பு, **ISO 9001:2000** தரச்சான்று ஆகியவை **சுரபியை** நீங்கள் வசிப்பிடமாகக் கொண்டுள்ளதை பெருமை கொள்ள வைக்கும்.

www.covaiprop.com

**COVAI**
**PROPERTY CENTRE (INDIA) PRIVATE LIMITED**

Member - CREDAI

An ISO 9001 : 2000 certified Company

PREFERRED FINANCIERS
HDFC HOME LOANS
WITH YOU, RIGHT THROUGH

727, Damu Nagar, Puliakulam Main Road, Coimbatore - 641 045.
Ph : 91-422-2312367, +91-422-6572625, Mobile: 98943 17841. Fax : +91-422-2312367.
E-mail: covaiprop@vsnl.net (or) info@covaiprop.com

**An Ex- Serviceman's Enterprise**

# ஆற்காட்டாருக்கு ஓ ஹோ...



''வெயில் புழுக்கத்தோடு சேர்ந்து மின்சாரமும் சதிசெய்து வரும் சம்மரில் அரசாங்கத்தைத் திட்டிக்கொண்டே வளைய வருகிறோம். ஆனால், அரசாங்கத்தின் மின்சார விநியோகத்தை நம்பாமல், நம் வீட்டுக் கூரைக்கு மேலே சிறிய அளவிலான காற்றாலையைப் பொருத்துவதன் மூலம், குறைந்த பட்சம் முன்னூறு வாட்ஸிலிருந்து அதிக பட்சமாக 20,000 வாட்ஸ் வரை மின்சாரத்தை உற்பத்தி செய்யலாம்'' என்கிறார் கோவை கிரீன் விண்ட் அண்ட் சோலார் பவர்டெக் பிரைவேட் லிட் இயக்குநர் கம் விஞ்ஞானி சசிகுமார். இவர் ஏற்கெனவே பம்ப் இண்டஸ்ட்ரி நடத்தி வந்தவர்.

''கடந்த 2006-07ம் ஆண்டு மட்டும் தமிழகத்தில் 13.9 சதவிகிதம் மின்சாரப் பற்றாக்குறை இருந்திருக்கிறது. இந்தியா முழுவதும் இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் மெகாவாட் மின் உற்பத்தியை நீர்மின் திட்டங்களின் மூலம் செய்வதற்கு வாய்ப்பு இருந்தும், 15 சதவிகிதம் மட்டுமே நம்மால் உற்பத்தி செய்ய முடிகிறது. அதுவும் தமிழகத்தில்தான் அதிக அளவு நீர் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. அப்படியிருந்தும் நம் மாநிலத்தின் தேவைக்கு அது மிகவும் குறைவானது. எனவேதான் அரசாங்கம் காற்றாலை மூலம், மின்சாரத்தை உற்பத்தி செய்து அதன் பற்றாக்குறையை நிவர்த்தி செய்ய முயன்று வருகிறது. ஆனாலும் நம் தேவை அதிகம். அதனால்தான் எங்கள் கிரீன் விண்ட் அண்ட் சோலார் பவர்டெக் வீட்டுக்கொரு காற்றாலையை அறிமுகப்படுத்தியிருக்கிறது. இயற்கையாகக் கிடைக்கும் காற்றின் மூலமும், சூரிய வெளிச்சத்தின் மூலமும் வீடுகளுக்கான மின்சாரத் தேவையைப் பூர்த்தி செய்துவிட முடியும்! இதனால் அரசாங்கத்தைச் சார்ந்திருக்க வேண்டிய நிலை இருக்காது. இந்தச் சிறிய காற்றாலைகள் மூலமாக, கம்ப்யூட்டர் மையங்களுக்கும், சிறிய அளவில் ஆரம்



* ஸ்ரீதரன்

ஒரு கிராமப் பஞ்சாயத்துக்கு, குறைந்தபட்சம் என்ன சொந்தமாக இருக்கும்? டீ.வி. பெட்டி... அரசாங்க நூலகம்... சுய உதவிக் குழுக்கள் மூலமாக நடத்தப்படும் ஏதேனும் சிறுதொழில் நிறுவனம் இருக்கும். ஆனால், கோவையிலுள்ள ஓடந்துறை ஊராட்சிக்குச் சொந்தமாக காற்றாலை இருக்கிறது என்று சொன்னால் நம்பித்தான் ஆகவேண்டும். இன்னும் ஐந்தாறு ஆண்டுகளில் அதன் மதிப்பு மட்டும் இரண்டிலிருந்து மூன்று கோடி வரை ஆகிவிடும் என்கின்றனர்.



பிக்கும் தொழிற்சாலைகளுக்கும் மின்சாரத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியும். இதன் மூலம் உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்தை பேட்டரியில் சேமித்துக் கொண்டு தேவை ஏற்படும்போதுகூடப் பயன்படுத்தலாம். இதேபோல சோலார் சிஸ்டமும் இருக்கிறது. பெரிய காற்றாலைகள்





* சசிகுமார்

# ஆலோசனை!

ஓடந்துறை ஊராட்சி தமிழகத்திலேயே சிறந்த ஊராட்சி என்று முதல் பரிசைப் பெற்றிருக்கிறது என்பது கூடுதல் பெருமை.

ஓடந்துறை ஊராட்சியின் முன்னாள் தலைவர் சண்முகம் ''இந்தியாவுல எல்லா வளமும் இருக்கு. ஆனால், அதைப் பயன்படுத்தி நாட்டு மக்களுக்கு உபயோகப்படுற மாதிரி திட்டங்களைச் செயல்படுத்தற தலைமை இல்லை. அதுதான் குறை''என்கிறார்.

# ஓடந்துறை

***காற்றாலை அமைக்கும் திட்டம் எப்படி வந்தது?***

''எங்க ஊராட்சிலேர்ந்து வர்ற வருமானமே ரொம்ப கம்மி. அதுல கரண்டுக்கு பாதி வருமானத்தைக் கொடுக்க வேண்டி இருந்துச்சு. அப்பதான் கையில இருக்கற பஞ்சாயத்து காசு நாற்பது லட்சத்தைப் போட்டு மீதித் தொகையை அரசாங்கத்துக்கிட்டேருந்து கடனா வாங்கி, இந்தக் காற்றாலையை ஆரம்பிச்சோம். இது கிட்டத்தட்ட மாசத்துக்கு 7.5 லட்சம் யூனிட் கரண்டை உற்பத்தி பண்ணுது. இதிலேர்ந்து எங்க பஞ்சாயத்துக்குத் தேவையான மின்சாரம் இலவசமா கிடைக்குது. மீதி

இயங்குவதற்கு என்று ஒரு குறிப்பிட்ட பருவம் இருக்கிறது. ஆனால், இதற்கு அப்படியல்ல. சாதாரணமாக வீசும் காற்றே போதுமானது'' என்கிறார் சசிகுமார்.

இந்தச் சிறிய காற்றாலையைப் பயன்படுத்தி, மின்சார வசதி இல்லாத வீரக்கல் மலைப் பகுதியில், வனமேம்பாட்டுத் திட்டத்தின் மூலம் ஆதிவாசிக் கிராமத்துக்கு மின்சார வசதியையும் அதன் மூலம் பூமியிலிருந்து குடி தண்ணீர் எடுத்துத் தரவும் கிரீன் விண்ட் அண்ட் பவர் டெக் நிறுவனம் ஏற்பாடு செய்து கொடுத்திருக்கிறது.

''இதற்கென ஆகும் செலவும் மிகக் குறைவுதான். அறுபதாயிரத்திலிருந்து எண்பதாயிரம் ரூபாய் வரை இதற்கென செலவு ஆகும். அதன் பிறகு முப்பத்தைந்திலிருந்து நாற்பது வருடங்கள் வரை மின்சாரத்துக்கு என்று எந்தச் செலவும் தேவையில்லை. இந்தத் தொகைகூட அரசாங்கம் எங்களுக்கு மானிய உதவி கொடுத்தால் குறையக் கூடும்'' என்கிறார் மார்க்கெட்டிங் மேனேஜர் ரவிச்சந்திரன்.

* ரவிச்சந்திரன்



**எம்மைப் போன்றவர்களை அரசின் மின்துறை பயன்படுத்திக் கொள்ள வேண்டும்!**

காற்றாலையை இந்தியாவிலேயே முதன்முறையாக தன் வீட்டில் அமைத்திருக்கும் ஸ்ரீதரன் கூறுகையில், ''இந்தச் சிறிய காற்றாலையை என் வீட்டில் பயன்படுத்துவதால், நான் மின்சாரத் தேவைக்காக அரசாங்கத்தை நம்பி இல்லை. வீட்டுக்கும், என் கடைக்கும் போதுமான மின்சாரத்தை காற்றாலை மூலமே பெற்றுவிடுகிறேன். இதனால் நான் செலுத்தும் மின்சாரக் கட்டணம் ரூ.5000, மாதாமாதம் என் சேமிப்பில் வந்து விடுகிறது'' என்கிறார்.

''எதிர்காலத்தில் மின்சாரப் பற்றாக்குறையைக் குறைக்க, இதுபோன்ற முயற்சிகளுக்கு அரசாங்கம் முழு ஒத்துழைப்பு தரவேண்டும். குறிப்பாக மின்சாரத்துறை அமைச்சர் ஆற்காடு வீராசாமிக்கு இதை எங்கள் நிறுவனத்தின் சார்பாக வேண்டுகோளாகவே வைக்கிறோம்'' என்கிறார் சசிகுமார்.

வாசகர் யோசனை : **உமார்த்தி**

---

மின்சாரத்தை அரசாங்கத்துக்கிட்டேயே வித்துடுறோம். அதனால மாசா மாசம் வட்டியும் குறையுது. இன்னும் நான்கைந்து வருடங்களில் இந்தக் காற்றாலை முழுவதும் எங்களுக்குச் சொந்தமாகிவிடும்.''



* சண்முகம்

**உங்களின் லட்சியம் என்ன?**

''ஓடந்துறை ஊராட்சியை குடிசை இல்லா ஊராட்சியாக்க வேண்டும். அது கிட்டத்தட்ட 95 சதவிகிதம் நிறைவேறிவிட்டது. மலைமேல் இருக்கும் குடியிருப்புகளுக்கு சோலார் சிஸ்டம் மூலம் மின்சாரம் கொடுக்கலாம் என்ற திட்டம் ஆலோசனையில் இருக்கு. அது சம்பந்தமா ஒரு தனியார் நிறுவனத்துக்கிட்ட பேசிக்கிட்டிருக்கோம்'' என்கிறார் சண்முகம்.



“ஒரு காலத்தில் கோவையை தென் இந்தியாவின் மான்செஸ்டர் என்று அழைக்கும் அளவுக்குத் துணித் தொழில் இங்கே கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தது. இன்று இந்தத் தொழில் தேய்ந்து பல மில்கள் மூடப்பட்டு விட்டன. சுமார் 50,000 தொழிலாளர்கள் வேலையிழந்து வீதிக்கு வந்து விட்டார்கள். இந்தத் தொழிலின் எதிர்காலம் என்ன ஆகுமோ என்ற கவலை எல்லோரையும் தொற்றிக் கொண்டிருக்கிறது'' என்கிறார் தென் இந்திய மில்களின் கூட்டமைப்பைச் (SIMA) சேர்ந்த ரகுராஜன்.

கோவையில் முதன்முதலாக 1888ல்

# தேய்ந்து போன மான்செஸ்டர்...

தொடங்கப்பட்டது நூற்பாலை மற்றும் நெசவாலை. இதைத் துவக்கியவர் ஸர். ராபர்ட் ஸ்டேன்ஸ். அதைத் தொடர்ந்து ஏகப்பட்ட மில்கள் தொடங்கப்பட்டன. இங்கு தொடங்கப்பட்ட மில்களின் சிறப்பு என்னவென்றால்,



* ரகுராஜன்



கோவை மாவட்ட ஸ்பெஷல்

பெரும்பாலானவை பஞ்சைத் தரம் பிரித்து, நூலாக்கி, பின்னர் நெய்து துணியாக்கி விற்பனை செய்யும் வகையில் உருவாக்கப்பட்ட ஒருங்கிணைந்த மில்கள் (Composite Mills). கோவை சுற்றுவட்டாரத்தில் பருத்தி விளைந்தது கோவை மில்களுக்கு மிகவும் வசதியாகப் போய்விட்டது. கொங்கு மண்டலம் மற்றும் சுற்றுவட்டார மாவட்டங்களில் விவசாயம் பொய்த்தபோது வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க கோவை மில்கள் கைகொடுத்தன. மில்களின் இயந்திரங்களை உருவாக்குவது, பழுதுபார்ப்பது தொடர்பாக நிறைய பொறியியல் தொழிற்சாலைகளும் துவங்கப்பட, கோவைக்கு வந்தால் வேலை வாய்ப்பு நிச்சயம் என்ற நிலை உருவாயிற்று. ஆனால் இன்றோ தொழில் நசிந்து அழியும் விளிம்பு நிலையில் உள்ளது. என்ன ஆயிற்று?

''ஒருங்கிணைந்த மில்களின் அவசியம் காலப்போக்கில் குறைந்து போய்விட்டது. பஞ்சைத் தரம் பிரித்து நூலாக்குவதற்கு ஆகும் செலவை விட, இறக்குமதி செய்யும் நூல் விலை குறைவாக இருப்பதால் பஞ்சாலைகளுக்கும், நூற்பாலைகளுக்கும் வேலையில்லாமல் போனது. தமிழகத்தில் தரமான பருத்தி உற்பத்தி குறைந்ததும் இந்த நிலைக்கு ஒரு காரணம்.

''ஆந்திராவில் இப்போது புதிய நூற்பாலைகள் வந்து





# ...தெருவில் நிற்கும் தொழிலாளர்கள்!

கொண்டிருக்கின்றன. அந்த மாநிலத்தில் பஞ்சு உற்பத்தியும் அதிகமாகி வருகிறது. துணி ஆலைகளின் இயந்திரங்கள் நவீனமாக்கப்பட்டதால் அவற்றில் வேலை வாய்ப்புகளும் குறைந்துவிட்டன. நமது நாட்டில் கிட்டத்தட்ட 1200 மில்கள் இருக்கின்றன. அதில் பத்து சதவிகிதம்தான் கோவையில் இருக்கின்றன. உலகப் பொருளாதாரச் சுணக்கம் காரணமாக விற்பனை குறைந்து மேலும் சரியத் துவங்கியது'' என்கிறார் ரகுராஜன்.

இந்நிலையில் ஆலைகளுக்கு நாற்பது சதவிகிதம் மின்வெட்டு அமுல்படுத்தப்பட்டிருக்கிறது. அதுவும் பீக் அவரில் நான்கு மணி நேரம். இது தவிர, இரண்டு மணி நேரம் லோட் ஷெட்டிங் (Load Shedding). இப்படிப்பட்ட சூழலில் பல மில்கள் வேலையை இரண்டு ஷிப்டுகளாகப் பிரித்து விட்டன. பல மில்கள் இது கூடச் செய்ய முடியாத நிலையில் மூடப்பட்டு விட்டன. கோவையில் பத்து மில்கள் மூடப்பட்டிருக்கின்றன.

''ஜெனரேட்டர் போட்டு உற்பத்தி செய்தால் செலவு இரட்டிப்பாகிவிடும். தாக்குப்பிடிக்கவே முடியாது. எந்தவிதத் தட்டுப்பாடு மற்றும் வெட்டின்றி மின்சாரம் கிடைத்தால் மட்டுமே மில்கள் கொஞ்சம் மூச்சுவிட முடியும்'' என்கிறார் ரகுராஜன்.

''இந்தியாவில் பஞ்சு வியாபாரம் 14 பெரிய வியாபாரிகளின் கையில் சிக்கிக் கொண்டு தவிக்கிறது. விவசாயிகளிடம் இருந்து கொள்முதல் எல்லாம் முடிந்த பிறகு மத்திய அரசு, ஏற்றுமதி செய்யப்படும் பஞ்சுக்கு ஐந்து சதவிகிதம் ஊக்கத் தொகை தருவதாகச் சொல்லியிருக்கிறது. இதனால் விவசாயிகளுக்கு எந்த லாபமும் இல்லை. பஞ்சு வியாபாரிகளுக்குத்தான் கொண்டாட்டம். இந்தியாவிலேயே பஞ்சுக்கான தேவை அதிகமாக இருக்கும்போது ஏற்றுமதியை ஊக்குவிக்க வேண்டியதன் அவசியமென்ன?'' என்று கேட்கிறார்கள் மில் அதிபர்கள்.

பதில் சொல்ல வேண்டிய கடமை மத்திய அரசுக்கு இருக்கிறது. அத்தோடு துணித் தொழிலைப் பொறுத்தவரை கோவை இழந்த புகழை மீட்டெடுக்க மத்திய, மாநில அரசுகள் இரண்டும் உடனடியாக உதவ வேண்டும். ●

**எந்தவிதத் தட்டுப்பாடு மற்றும் வெட்டின்றி மின்சாரம் கிடைத்தால் மட்டுமே மில்கள் கொஞ்சம் மூச்சு விடமுடியும்**



# பெட்டிஷன் பாக்ஸ்

## பஸ் இம்சைகள்

- கோவை மாநகரப் பேருந்துகளில் பெரும்பாலானவற்றில் பெண்கள் இருக்கைகளில் ஆண்கள் அமர்ந்தும், பெண்கள் நின்றும் பயணம் செய்யும் அவலநிலை உள்ளது. சென்னை மாநகரப் பேருந்துகளில் உள்ளது போல ஊர்தி ஓட்டுநரின் இருக்கைக்குப் பின்பக்கம் முழுவதும் ஆண்கள் அமர்ந்து பயணம் செய்யும் நிலை இங்கு இல்லை.
- பேருந்துகள் பலவற்றில் இசை நாடாக்களும் வானொலிப் பெட்டிகளும் வைத்துத் தீராத தலைவலியை அளித்து வருகின்றனர். எந்த ஒரு பேருந்திலும் இனி வானொலியோ, இசைப் பாடல்களோ வைக்கக் கூடாது என சட்டம் கொண்டு வர வேண்டும்.
- பெரும்பாலான ஊர்திகளில் முகப்பு விளக்குகள் கண்களைக் கூச வைக்கும் அளவுக்கு இயங்குகின்றன. நடந்து போவோரும் எதிரில் வருவோரும் இதனால் பெரிதும் இன்னலுக்குள்ளாகின்றனர். விபத்துக்கள் கூட ஏற்படுகின்றன. நகரின் எல்லைக்குள் ஓடும் அனைத்து ஊர்திகளின் முகப்பு விளக்குகளின் ஒளியளவை மட்டுப் படுத்தி ஓட்டுவதற்கு ஆவன செய்ய வேண்டும்!

இதுகுறித்து தொடர்புடைய அலுவலர்கட்கு ஏற்கெனவே கடிதங்கள் எழுதப் பட்டும் இதுவரை எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இனியாவது நடவடிக்கை எடுப்பார்களா?

*- மா. மோகன்.*



**உலகெங்கும், பலதரப்பட்டவர்களால் ஆன்மிக வழிகாட்டியாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளவர் சத்குரு ஜக்கி வாசுதேவ். கல்கி கோவை மாவட்ட ஸ்பெஷலுக்காக ஈஷா யோகா மையத்தில் அவரைச் சந்தித்த போது...**



***நீங்கள் கோவைக்கு முதன் முறையாக வந்து யோக, தியான வகுப்புகள் எடுத்தபோது கண்டுணர்ந்த ஆன்மிகம் இப்போது எந்த நிலையை அடைந்திருக்கிறது?***

''அப்போதெல்லாம் எண்பது சதவிகிதம் பேர் உடல் நலத்தைக் காத்துக் கொள்வதற்காக யோக, தியான வகுப்புகளுக்கு வருவார்கள். ஆனால், அந்த நிலை மாறி இப்போது பதினைந்து சதவிகிதம் பேர் தான் உடல் நலத்துக்காக இந்த வகுப்புகளுக்கு வருகிறார்கள். அடுத்த கட்ட உள்முகத் தேடலுக்கான பயணம் துவங்கிவிட்டது. இந்த மாற்றம் என்னை மகிழ்ச்சியடையச் செய்கிறது. இந்த மாற்றம் கோவையின் மையத்தில் உள்ள மத்தியச் சிறைச்சாலையையும் தொட்டுவிட்டது. சிறை இருப்பவர்களின் நடத்தையில் கண்ணியம் கூடியிருக்கிறது. இதைக் கண்டு அதிகாரிகள் ஆச்சர்யப்படுகிறார்கள்.''

***எதிர்பார்ப்புகளோடு வரும் மக்களது ஆசைகள், விருப்பங்களை ஈஷா எப்படி தீர்த்து வைக்கிறது?***

''இங்கு வந்து தியான லிங்க வளாகத்துக்குள் கண்களை மூடி அமர்பவர்கள் மீண்டும் வீடு திரும்பும் போது, மனநிறைவோடு, பலவிதப் பயன்களைப் பெற்றுத் திருப்தியோடுதான் செல்கிறார்கள். மந்திரத்தால் மாங்காய் வரவழைக்கும் வித்தை அல்ல இது. தியான சூட்சுமம் தெரியாதவர்கள் கூட, ஒரு மணி நேரம் தியானலிங்கத்தின் முன்னால் கண்ணைக் மூடிக்கொண்டு அமர்ந்தால், அது உங்களுக்குள் ஏற்படுத்தும் மாற்றங்கள் நிறைய. நடைமுறை வாழ்வில் பொருளும், பணமும்தான் நமக்குப் பயனுள்ளவையாகத் தெரிகின்றன. ஆனால், அதையெல்லாம் விட

# ''ஈஷா, ரசிகர் மன்றம் அல்ல!''

உயர்வான பொக்கிஷத்தின் கதவை யோகமும், தியானமும் திறந்து வைக்கின்றன. மனம் குமுறும் கடலாய் இருந்தால், அது சமூகத்தில் அராஜகத்தை உருவாக்கும். ஒவ்வொரு தனிமனிதனையும், அமைதியாக்குவதும், மகிழ்ச்சியாக்குவதும் தான் ஈஷாவின் பணி.''

***மதம், இப்போது அரசியல்வாதிகளின் கைகளில் மாட்டிக் கொண்டிருக்கிறதே?***

'' 'இந்து' என்பது பூகோள ரீதியாக இந்தியாவில் பிறந்தவர்களை அடையாளம் காட்டும் சொல். இந்து மதம் என்பதே இல்லை; கலாசாரம்; வாழ்க்கை முறை. கடவுள் இல்லாத ஒரே கலாசாரம் நமது இந்து கலாசாரம்தான். எதனோடு நீங்கள் அதிக தொடர்பில் இருக்கிறீர்களோ அதையே கடவுளாக வணங்கலாம்.

ஒரு மனிதன் ''மதத் தன்மை'' அடைகிறான் என்றால், அது அனைத்து மோதல்களுக்கும் முடிவாக இருக்க வேண்டும். ஆனால் இங்கே மதங்கள் மனிதனுக்கு அதிகபட்ச துன்பத்தைக் கொடுக்கின்றன. இதற்கு முக்கியக் காரணம், ''உங்கள் வழிதான் சிறந்தது'' என்று நீங்கள் கருத, மற்றவர்களோ ''அவர்கள் வழிதான் சிறந்தது'' என்று கருதுவது. இந்த வகையில் ஒரு குழு மற்றொரு குழுவுக்கு எப்போதும் அச்சுறுத்தலாகவே இருக்கிறது.

மாற்றுக் கலாசாரங்களுக்கும் மதிப்பளிக்கும் உயர்ந்த கலாசாரம் நம்முடையது. நாம் அதை மீட்க வேண்டும்.''




***உங்கள் தியான வகுப்புகளில் உச்சகட்டமாக ஆனந்த நடனம் ஏன்?***

''என்னிடம் வருபவர்களை உற்சாகப் படுத்துவதுதான் என் முதல் வேலை! மனிதனுக்கு ஏற்படும் எந்த ஒரு உற்சாகமும் அவனது செயலில் தெரியும். ஒரு ரசிகன் தனக்குப் பிடித்த நடிகரின் படத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கும்போது சந்தோஷம் கொண்டு எழுந்து ஆடுவதைத் திரையரங்குகளில் நீங்கள் பார்த்திருக்கலாம். அதே போல பிடித்த அரசியல் தலைவரை கூட்டத்தில் பார்த்தால் 'தலைவா' என்று சொல்லி ஆடும் தொண்டர்களும் இருக்கிறார்கள். கூட்டத்தில் ஒருவன் அடையும் ஆனந்தம் என்பது ஒரு தொற்று (infection) போன்றது. wine குடித்தால் தான் ஆட்டம் போடுவார்கள். நாங்களும் wine குடித்திருக்கிறோம்! அது devine. அந்த devineதான் எங்களை ஆட்டம் போட வைக்கிறது.''

***பொருளாதார சுணக்கத்திலிருந்து இந்தியா மீண்டு வர வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்?***

''உலகத்தில் ஒரே வர்த்தகம் தான் நடைபெற வேண்டும். அது மனித குலத்தின் நல்வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும். அதற்கான சிந்தனையை

இப்போதைய சூழ்நிலை தூண்டிவிட்டி ருக்கிறது. கடந்த காலத்தைப் பார்க்கும்போது பலதுறை வளர்ச்சியில் அமெரிக்காவும் மற்ற ஐரோப்பிய நாடுகளும் எங்கோ ''மேலே'' போய் விட்டதாக நாம் பொருமிக் கொண்டி ருந்தோம். இப்போது அவர்கள் கீழே விழும் போது 'வலி' தெரிகிறது. தகுதியை மீறிய வளர்ச்சியாக அது அமைந்துவிட்டதால் ஏற் பட்ட விபரீதம் அது. நிதானமாக வளர்ந்து கொண்டிருந்த நமக்கு அந்த அளவுக்கு இப்போது அடி இல்லை. இந்த மோசமான நிலையிலும் நமது பொருளாதார வளர்ச்சி விகிதம் கவலைப்படத் தக்கதாக இல்லை. இப்போது நமக்கும் அமெரிக்காவுக்கும் சமமான ஆடுகளம் (Level playing field) அமைந்திருக்கிறது. அற்புதமான வாய்ப்பு இது. இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு நமது தொழிலதிபர்களும், அரசியல் தலைமையும் இணைந்து ஒற்றுமையாகச் செயல்பட வேண்டும்.''




***உங்களை மக்கள் எப்படி பயன்படுத்திக் கொள்ள வேண்டும்?***

''ஈஷா ஒன்றும் ரசிகர் மன்றம் இல்லை. இங்கு ஓர் ஆன்மிக நடைமுறை பொது மக்களின் பயன்பாட்டுக்காகத் திறந்த நிலை யில் இருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டியது மக்களின் கடமை. ஆயிரம் வருடங்களுக்கு ஒருமுறைதான் இது போன்ற வாய்ப்பு மக்களுக்குக் கிட்டும். மனிதன் உள்நிலை பயணத்தில் அடியெடுத்து வைத்து மாற்றங்களை எதிர்கொள்ள கர்மம், ஞானம், பக்தி, க்ரியா ஆகிய யோக வழி முறைகள் உள்ளன. ஆனால், ஒவ்வொரு மனிதனுக்கும் இந்த நான்கில் எவ்வளவு தேவை என்பதைக் கண்டறிந்து, அவனுக்கு வழிகாட்டும் வாய்ப்பு இங்கேதான் இருக் கிறது.''

***ஈழத் தமிழர் பிரச்னையில் உங்கள் பார்வையில் தீர்வு என்ன?***

''நமது நாட்டுக்கும் இலங்கைக்கும் ஆயிரம் ஆண்டுகளாகத் தொடர்பிருக்கிறது. அங்கு இருப்பவர்கள் தமிழர்கள் என்பதை விட இந்தியர்கள் என்பதுதான் சரி. நமது அண்டை நாடாக இருப்பதால் அங்கு நிலவும் உள்நாட்டு மோதலை முடிவுக்கு கொண்டு வருவதில் நமக்குப் பெரிய பொறுப்பிருக்கிறது. இரண்டு தலைமுறைகள் மோதலில் சிக்குண்டு திசை தெரியாமல் போய்விட்டன. போராடும் குழுக்களுக்கு ஆயுதமும் பயிற்சியும் வழங்குகிறோம். பின்னர் அவர்களையே எதிர்க்க வேண்டிய நிலையும் வந்தது. பல விஷயங்கள் நடந்து விட்டன. இப்போது நாம் நமது ராணுவத்தை அனுப்ப முடியாது. ஆனால் அங்கு வேத னையில் வாடும் மக்களுக்கு நியாயம் பெற்றுத்தர வேண்டிய பொறுப்பு நமக்கிருக் கிறது.''

***கோவையின் வளர்ச்சிக்கு ஈஷாவின் திட்டம்?***

''கிராம புத்துணர்வு இயக்கம், பசுமைக் கரங்கள் என்று பல திட்டங்களைச் செயல் படுத்தி வருகிறோம். சுமார் ஒன்றரை கோடி மரக் கன்றுகள் நடுவதாகத் திட்டம். கோவை மாவட்டத்தில் உள்ள மதிய உணவு சாப்பிடும் ஒன்றரை லட்சம் குழந்தைகளுக்கு அன்றாடம் சத்தான உணவுகளை வழங்க ஒரு திட் டத்தைச் செயல்படுத்த இருக்கிறோம்.'' ●

உ

ஸ்ரீ ராம ஜெயம்

# நவபிருந்தாவனம் 31-வது புனிதயாத்திரை

ஆனேகுந்தி ஸ்ரீ ராகவேந்திரா ஸ்வாமி மடத்தில், நவபிருந்தாவனம் வரும் பக்தர்களின் நித்ய அன்னதானத்திற்கும் மற்றும் கோவை தோழர் அறக்கட்டளையின் அனாதை பிரேதங்கள் நல்லடக்கத்திற்கும் உதவி வரும் ஸ்ரீ பிருந்தாவன் சேவா டிரஸ்ட் சார்பாக கீழ்காணும் தேதிகளில் புனித யாத்திரை அழைத்துச் செல்கின்றோம்.

**நவபிருந்தாவனம் 31வது புனித யாத்திரை 21-05-2009 முதல் 24-05-2009 வரை**

நவபிருந்தாவனம், ஹம்பி, பிக்ஷாலயா, பஞ்சமுகி, மந்திராலயம்



நவபிருந்தாவனம்

23-05-2009 அன்று நவபிருந்தாவனத்தில் உள்ள நவதீர்த்தர்களின் ஜீவ பிருந்தாவனங்களுக்கு அபிஷேக, அலங்கார ஆராதனைகள் நடைபெறும்.



ஸ்ரீ ராகவேந்திரா

## திருக்கயிலாய யாத்திரை



திருக்கயிலாய யாத்திரையை 36 முறை மேற்கொண்ட

**ஸ்ரீ ஸ்வாமி ராதாகிருஷ்ணாஜி**

அவர்களின் தலைமையில்

ஸ்ரீ பிருந்தாவன் சேவா டிரஸ்ட் தனது திருக்கயிலாய யாத்திரையை 11-06-2009 அன்று துவக்கவுள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

இரண்டாவது யாத்திரை 11-09-2009 .

முன்பதிவு நடைபெறுகிறது.



**காசி - கயா - திரிவேணி சங்கமம் (அலகாபாத்) 07 -06 -2009 முதல் 18 -06-2009**



காசி விஸ்வநாதர்

காசி - பிரம்ம முகூர்த்த வேளையில் மூன்று நாட்கள் காசி விஸ்வநாதருக்கு கங்கை நீரால் அபிஷேகம், 11 பண்டிதர்களால் விசேஷ மகாருத்ர பூஜை நடைபெறும். காசி விசாலாட்சி, அன்னபூரணி, காலபைரவர், சங்கடம் தீர்க்கும் ஆஞ்சநேயர் கயா - முன்னோர்களுக்கு சிரார்த்தம். புத்தகயா - புத்தர் ஞானோதயம் பெற்ற போதிமரம். திருவேணி சங்கமம் கங்கா - யமுனா - சரஸ்வதி மூன்று நதிகள் சங்கமிக்கும் திரிவேணி சங்கமத்தில் நீராடல்



ஸ்ரீ அன்னபூரணி

மேற்கண்ட புனிதயாத்திரையில் கலந்து கொள்ள விருப்பம் உள்ளவர்கள் முன்பதிவு செய்ய தொடர்புக்கு

## ஸ்ரீ பிருந்தாவன் சேவா டிரஸ்ட்

29F, ஸ்ரீ லட்சுமி தர்சன், புலியகுளம், கோவை - 45.

தொலைபேசி எண்கள்: 0422 - 6451709, 6454134, 4322427

brindhavansevatrust@gmail.com

98422 - 14347
94425 - 45454
93675 - 57555
93632 - 20913
98428 - 14347

# மறுபிறவி எடுத்த நல்லய்யன்!

திருச்செங்கோட்டுக்காரர் நல்லய்யனுக்கு வயது 70. விவசாயி. சில நாட்கள் முன்னால் கோவை ஜெம் மருத்துவ மனைக்கு, வயிற்றுப் பகுதியில் வலி என்று வந்தார். பரிசோதனைகளுக்குப் பிறகு அவருடைய கல்லீரலின் இடப்புறம் பத்து சென்டிமீட்டர் அளவுக்கு கான்சர் கட்டி உருவாகியிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

"லேப்பரோஸ்கோப்பி கிகிச்சையை இப்போதிருக்கும் அதிநவீன ஹபீப் ஆர்.எஃப்.ஏ., ஹார்மோனிக் ஸ்கால்பல் (இரத்தக் குழாயைக் கட்டுப்படுத்தும் கருவி மற்றும் கல்லீரல் திசுக்களை உறிஞ்சி எடுக்கும் கருவிகள்), க்யூசா மற்றும் எண்டோஸ் டாப்ளர் கருவிகள் மூலம், துளியும் இரத்த சேதம் இன்றிச் செய்து விடலாம். நல்லய்யனுக்கு அப்படிப்பட்ட சிகிச்சைதான் அளிக்கப்பட்டது. சிகிச்சை முடிந்த மறுநாளே அவர் பாட்டுக்கு வழக்கம் போல நடக்க ஆரம்பித்துவிட்டார். சாப்பாடு சாப்பிட்டார். அவருக்கு வலியே இருக்கவில்லை. ஆரம்பத்தில் பரிசோதனையின் போது, தமக்கு வந்திருப்பது கல்லீரல் கான்சர் என்று மிகவும் பயந்து போனவர், இப்போது மகிழ்ச்சியாக வீடு திரும்பத் தயாராகிவிட்டார்!" என்றார் ஜெம் மருத்துவ மனை தலைமை மருத்துவர் டாக்டர் சி.பழனிவேலு.

கல்லீரல் புற்றுநோய் இருக்கிறது என்பது வெளிப்படையாகத் தெரிய வாய்ப்பில்லை. வலியைத் தவிர பசியின்மை, உடல் எடை குறைந்து வருதல், களைப்பாக இருத்தல் என்ற காரணங்கள் சிலருக்கு இருக்கும். ஸ்கேன் மற்றும் இரத்தப் பரிசோதனை மூலம் எளிதாகக் கண்டு பிடித்துவிடலாம். தகுந்த பாதுகாப்பு எடுத்துக் கொண்டால், புற்றுநோய் தாக்காமல் தடுக்கலாம். ஆரம்ப நிலையிலேயே கண்டறிந்தால் லேப்பரோஸ்கோப்பி சிகிச்சை அளித்து நோயாளியைக்



✱ டாக்டர் சி.பழனிவேலு

*உடல் எடை பருமன் குறைவுக்கான நவீன சிகிச்சையை, வரும் ஜூன் மாதம் முதல் ஜெம் மருத்துவமனை மேற்கொள்ளப்போவதாக டாக்டர் பழனிவேலு குறிப்பிட்டார்.*

*கல்லீரல் மாற்று அறுவைச் சிகிச்சையை (அதாவது லிவர் ட்ரான்ஸ்பிளான்ட்) வரும் 2010ஆம் ஆண்டு ஜனவரி முதல் கோவை ஜெம் மருத்துவமனை துவங்குகிறது! அதற்காகத் தனி ஆபரேஷன் தியேட்டர் தயாராகிறதாம். இதற்குப் பரிசோதனைக்கூட ஆதாரவும் தேவை. தில்லியில்தான் இந்த மாற்று அறுவைச் சிகிச்சை செய்து வருகிறார்கள். இந்தப் பெருமையை மட்டுமல்ல, வசதியையும் தென்னிந்தியாவில் கோவை நகரம் முதன்முதலாகப் பெறவிருக்கிறது!*





* நல்லய்யன்

காப்பாற்றலாம்.

ஹெபடைட்டிஸ்-பி மற்றும் சி தொற்றுக்கு உள்ளானவர்களுக்கும் சத்தான உணவு கிடைக்காதவர்களுக்கும் பாதிப்பு அதிகமாக வாய்ப்பு இருக்கிறது. திசுக்கள் கடினமாகி கல்லீரல் அதீத வளர்ச்சியடைந்த (சிரோஸிஸ்) காரணமாக பாதிப்புக்கு உள்ளானவர்களுக்கும் இந்தத் தாக்குதல் வரும். தொடர்ந்து பரிசோதனை செய்து கொள்வது அவசியம்.

நம் நாட்டில் ஹெபடைட்டிஸ் - பி மற்றும் சி பாதிப்பு அதிகமாக இருக்கிறது. ஆசியாவிலேயே இந்தியாவில்தான் அதிகப் பாதிப்பு உள்ளது. எனவே இந்தப் பிரிவினருக்குத் தொடர்ந்த கண்காணிப்பு அவசியம்.

முழுமையான சோதனையை அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் மூலம் நம்பகமாகப் பெறலாம். இரத்தத்தில் அல்ஃபா ஃபீட்டோ ப்ரொட்டீன் அளவு சோதனையும் செய்யப்படுகிறது. சாதாரண அளவைவிட மூன்று மடங்கு இது இருந்து விட்டால் கல்லீரல் புற்று நோய் இருக்கிறது என்று உறுதி செய்து கொள்ளலாம்.

பொதுவாகவே கல்லீரல் அறுவைச் சிகிச்சை கடினமானது. இரண்டரை மணி நேரம் ஆகும். இரத்த சேதம் அதிகமாக இருக்கும். முன்கூட்டியே ரத்தம் சேமித்து வைத்துக் கொண்டுதான் அறுவைச் சிகிச்சையைத் தொடங்க முடியும். ஆனால், லேப்பரோஸ் கோப்பி முறையில் இரத்த சேதம் அதிகம் இல்லாமலே எளிதாகப் புற்றுநோய்க் கட்டியை அகற்றி விடலாம்.

**மே**லும் தற்போது நவீன கருவிகள் சிகிச்சைக்கு உதவுவதால் ஆபத்தோ பயமோ இன்றி, ரத்த சேதம் ஏதுமின்றி குணமாகி விரைவில் வீடு திரும்பலாம். முன்பெல்லாம் கல்லீரல் அறுவைச் சிகிச்சையின்போது, அதிக இரத்தப் போக்கு காரணமாக, நோயாளி அறுவைச் சிகிச்சை கட்டிலிலேயே இறந்து போன உண்மை நிகழ்ச்சிகள் உண்டு. இப்போது நிலைமை அப்படி இல்லை. இன்னொரு கூடுதல் நன்மை என்ன தெரியுமா? வெளியேயிருந்து இரத்தம் உடலில் செலுத்தத் தேவை இல்லாததால், கல்லீரல் கான்சர் நோயாளி பெறும் நவீன சிகிச்சை மூலம் அதிக வருடங்கள் வாழ முடியும். கான்சருக்கு அளிக்கப்படும் கீமோ தெரபி சிகிச்சையும் தேவை இல்லை!'' என்கிறார் டாக்டர் பழனிவேலு.

**- சாருகேசி**

# மனசுக்கு ஒரு டாக்டர்!



சேரோட்டைச் சேர்ந்த மஞ்சுநாத்துக்கு லுங்கி, பெட்ஷீட் வியாபாரம். வெயிலோ, மழையோ ஊர் ஊராய்ச் சுற்றிய வரைப் பிடித்துக்கொண்டது சர்க்கரை குறைபாடு. ஒரு நாளைக்கு இரண்டு முறை இன்சுலின் போட்டாலும் சர்க்கரை அளவு நார்மலுக்கு வராத உடல்நிலையால் அவரின் வியாபாரமே முடங்கிப் போனது. ''மருந்துகளை நம்புவதை விட வேதாத்ரி மகரிஷி சொல்லித் தரும் மனவளக் கலைக்கு வாருங்கள். நிச்சயம் விடிவு வரும்'' என்றார் நண்பரொருவர். ஒரு நம்பிக்கை யில்லாமல்தான் மனவளக் கலை வகுப்பில் சேர்ந்தார் மஞ்சுநாத். ஆச்சர்யம்! ஒரே மாதத்தில் மன வளக்கலையால் சர்க்கரையின் அளவு நார்மலுக்கு வந்து விட்டது. வாழ்க்கையில் சந் தோஷம் சல்யூட் போட் டது. அந்த பேரானந் தத்தை குருவின் சன்னிதி யிலேயே அனுபவிக்க வேண்டும் என்று ஆளி யாரில் உள்ள அறிவுத் திருக் கோயிலில் நிரந்தரமாக வந்து தங்கி சேவை செய் கிறார் மஞ்சுநாத்.

அமைதியற்றுக் கிடக்கும் சமூகத்தைச் சாந்தப்படுத்த வேண்டுமென்றால், தனிப்பட்ட குடும்பங்களில் அமைதி நிலவ வேண்டுமென்று தீர்மானித்து, அதற்காகவே மனவளக் கலை என்ற பயிற்சி முறையை வடிவமைத்தார் வேதாத்ரி மஹரிஷி. இந்தப் பயிற்சி முறை யால் பலனடைந்த அருட்செல்வர் நா.மகாலிங்கம் - வேதாத் திரியை ஆளியாருக்கு அழைத்து வந்தார். தமக்குச் சொந்த மான ஐந்து ஏக்கர் நிலத்தைக் கொடுத்தார். 1990ல் ஆளியார் அறிவுத் திருமேனி வளாகம் உருவானது. 95 வரை வாழ்ந்த மகரிஷியின் சமாதியும் இங்கிருக்கிறது.

''எளிய பயிற்சிகள் மூலமாக நமது உயிர்சக்தியான குண்டலினி சக்தியைத் தூண்டிவிட முடியும். மனநிறைவான வாழ்க்கையைக் கைக்கொண்டுவிட முடியும்'' என்கிறார் மனவளக்கலை பேராசிரியர் புலவர் தியாகராஜன். மன வளப் பயிற்சி ஒரு பாடத் திட்டமாகவே, பாரதியார், பாரதிதாசன் மற்றும் அவினாசிலிங்கம் பல் கலைக்கழகங்களில் வைக் கப்பட்டிருக்கிறது. ''யோகா மற்றும் மனித மாண்பு'' என்ற பாடத்தில் டிப்ளமா, மற்றும் பட்ட, பட்ட மேற்படிப்புகள் உள் ளன. வருடத்துக்கு எட்டா யிரம் மாணவர்கள் மனவளக் கலை கற்கிறார்களாம். நிறைய மஞ்சுநாத்களையும் குணப் படுத்தியிருக்கிறது ஆழியார் திருக்கோயில்.

# INVEST IN



# INCOMPARABLE LIVING

**Covai Property Centre (India) Private Limited** deals with real estate development and construction in **Coimbatore**, Tamil Nadu, India. The Company is involved in changing the landscape of real estate in Coimbatore through a range of activities like:

- Development of land with complete infrastructure
- Construction of residential & commercial properties
- Project management from conceptualization to execution
- Joint development of projects

Run by a team of young Professionals, **the ISO 9001:2000 Certified** Company adopts modern management concepts and provides transparency in real estate business and has spoken reputation for developing housing projects which provide value for money. For details of our projects past, present and future, please visit our web site at www.covaiprop.com

At Covai Property Centre, we realize that buildings, infrastructure and environment are inextricably linked. We have specialized in Comfort & Retirement Homes, Gated Communities, Apartments, Commercial Complexes, development of infrastructure for large industrial requirements and construction of high value villas, schools etc

Our projects are designed to be eco and environment friendly and are economical in design. Reverse Osmosis plant for clean drinking water, Sewage Treatment Plant with recycling arrangements, use of solar energy for power, hot water, solid waste management including Vermi-composting are some of our efforts to provide clean and green environment. **Soundaryam – Santhosham Comfort and Retirement Homes** has been adjudged as the **Most Eco Friendly Gated Community** in Coimbatore in 2008 and **GEM Nirmaalayam for the Year 2009.**

**We care for nature as much as we care for you.**

## CURRENT INNOVATIVE PROJECTS

**COMFORT & RETIREMENT HOMES**

- **SOUNDARYAM Extension**

**COMMERCIAL COMPLEX**

- **ACHAL'S ARCADE**

**APARTMENT COMPLEXES**

LIFE OF LUXURY
AT AFFORDABLE COST!

- **VEDAM ENCLAVE** at Ondipudur
- **SURABI** at Trichy Road (Close to Race Course)
- **SUPRABHAT** (Redfields)




**COVAI**®
PROPERTY CENTRE
(INDIA) PRIVATE LIMITED

727, Damu Nagar, Pulakulam Main Road, Coimbatore - 641 045.
Ph : 91-422-2312367, +91-422-6572625, Mobile: 98943 17841. Fax : +91-422-2312367.
E-mail: covaiprop@vsnl.net (or) info@covaiprop.com


An Ex-Serviceman's Enterprise

www.covaiprop.com



வீட்டுக்குள் சில கழுகுகள்
உல்லாசமாய்.
வெளியே பல புறாக்கள்
கைதிகளாய்.
கூடைக்குள் ஒடுங்கிக் கிடக்கின்றன
கோழிக் குஞ்சுகள்.
பறக்கத் துடிக்கும் இறக்கைகளுக்குள்
பதுங்கிக்கொள்கின்றன
பெரிய கோழிகள்.
வெளியே -
பலர் கையில் முறங்களோடு
புறாக்களின் எச்சங்களைத் தேட...
உள்ளே -
முனங்கும் குரல்...
தாய்க்கோழியின் இறக்கைகளுக்கு
ஒத்தடம் தர வேண்டும்.
புறாக்களை உள்ளே அனுமதியுங்கள்
மறக்காமல் -
கழுகுகளை வெளியேற்றிவிட்டு.

# வீட்டுக்குள் கழுகுகள்





- கே.சுபாஷிணி

## காதைக் கொடுங்க!

# ஆரணி ஆட்டம்!



● ஆரணித் தொகுதியில் அன்புமணியின் மாமனார், முன்னாள் தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி போட்டியிடுவதால், அ.தி.மு.க. கூட்டணியில் உள்ள பா.ம.க. கொஞ்சம் தடுமாற்றத்தில் உள்ளது. தொகுதிப் பங்கீட்டில் ஜெ.விடம் ஆரணியைக் கேட்காமல் விட்டதற்குக் காரணம், அந்தத் தொகுதியில் போட்டியிட கிருஷ்ணசாமி முயன்று வந்ததுதான். தேர்தல் அறிவிப்புக்கு முன்னரே அன்புமணியும், பா.ம.க. பிரமுகர்களும் ஆரணித் தொகுதியில் 'பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு' வந்துவிட்டதாகச் சொல்கிறார்கள். ''பா.ம.க. தொண்டர்கள் முழு ஒத்துழைப்பு கொடுத்து எங்கள் வேட்பாளரை வெற்றி பெறச் செய்ய வேண்டும்'' என்று ஜெ., மருத்துவரிடம் சொல்லியிருக்கிறாராம். இருந்தும் ஆரணி அ.தி.மு.க. வேட்பாளர் சுப்பிரமணி கொஞ்சம் ஆட்டத்தில்தான் இருக்கிறாராம்!



● ஜெயலலிதா வானத்தில் பறந்து பிரசாரத்தில் பிஸியாக இருக்க, வழக்கமாக பிரசார வாகனத்தில் தமிழகத்தைச் சுற்றி வரும் வைகோ குழப்பத்தில் இருக்கிறார். மிகுந்த போராட்டத்துக்குப் பிறகு அவருக்கு ஒதுக்கப்பட்ட நீலகிரி, ஈரோடு, தஞ்சை ஆகிய மூன்று தொகுதிகளிலும் ம.தி.மு.க. வேட்பாளர்கள் பலம் பொருந்திய மத்திய அமைச்சர்களை எதிர்த்துக் களம் காண்கிறார்கள். எனவே, தன் தொகுதியையும் பார்த்துக் கொண்டு, ம.தி.மு.க. வேட்பாளர்களின் தொகுதிகளில் மட்டும் பிரசாரம் செய்தால் என்ன என்ற கேள்வி அவரைக் குடைந்து கொண்டிருக்கிறது. ஆனால், பல தொகுதிகளில் போட்டியிடும் அ.இ.அ.தி.மு.க. வேட்பாளர்கள், வைகோ பிரசாரம் செய்தால் உதவியாக இருக்குமே என்று அவரைத் தொடர்புகொண்டு வருகிறார்கள்.

● கன்னியாகுமரி தொகுதியில் போட்டியிடும் ஹெலன் டேவிட்சன் (தி.மு.க), ஆஸ்டின் (தே.மு.தி.க), பெல்லார்மின் (மார்க்சிஸ்ட்) ஆகிய மூவரும் கிறிஸ்தவர்கள். தொகுதியில் மெஜாரிட்டி கிறிஸ்தவர்களாக இருந்தாலும் அவர்களின் வோட்டுகளை மூவரும் பிரித்துக் கொள்வார்கள். ஆதலால் இந்துக்களின் வோட்டை முழுமையாகப் பெற்று வெற்றி பெறும் முனைப்பில் இருக்கிறார் பொன். ராதாகிருஷ்ணன் (பா.ஜ.க). தேர்தல் நெருங்கி வரும் சமயத்தில் இந்த நிலைமையைப் புரிந்துகொண்டு, வெற்றி பெற வாய்ப்புள்ள ஒரு கிறிஸ்தவ வேட்பாளருக்கு முழுமையாக ஆதரவு கொடுத்து பொன். ராதாகிருஷ்ணனைத் தோற்கடிப்போம்'' என்கிறார் பிரசாரத்தில் ஈடுபட்டுள்ள கிறிஸ்தவப் பிரமுகர் ஒருவர்.

– ஸ்ரீநிதி

சலசலத்து ஓடிய சரயுவின் தண்புன லில் துள்ளிக் குதித்தன மீன்கள். ஆனந்த பைரவியை ஆலாபனை செய்வது போல ஒலியெழுப்பிக் கொண்டிருந்தன பறவை கள். தாவரங்களின் புன்னகையாய் விகசித்த மலர்களைச் சுற்றிப் பாடிக் கொண்டிருந்தன வண்டுகள்.

இயற்கையின் இந்த உற்சாகத்தைக் கண்டு குதூகலப்பட்ட தென்றல், அயோத்தியின் அலங்காரத்தைக் கண்டு பிரமித்துப் போனது.

கோட்டைச் சுவர்களில் பறந்த கொடி கள்; தெருவெங்கும் கமுகும் வாழையும் நாட்டப்பட்டு, நெடுகிலும் கட்டப்பட் டிருந்த தோரணங்கள்; இல்லங்கள் தோறும் முகப்பில் வசீகரித்த கோலங்கள்... என்று சந்தோஷக் கிரணங்களை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது அந்தத் திருநகர்.

அந்த சந்தோஷத்தை அரண்மனை யிலிருந்து வெளிப்பட்ட வாத்தியங்களின் முழக்கம் அதிகப்படுத்தியது. ஆம்; பதி

# பரதன் தந்த பரிசு

ஆர்.ஸ்ரீநிவாச ராகவன்

னான்கு ஆண்டுகளுக்குப் பிறகு அயோத்தி யின் அரண்மனையில் புன்னகையும் பூரிப் பும் இன்றுதான் குடிபுகுந்திருக்கின்றன.

காரணம், ராமன் முடிசூடி விட்டான்!

''இதைக் காண வேண்டும் என்றுதான் தசரதன் ஆசைப்பட்டான். அவன் காணா விட்டாலும் அவனுடைய விருப்பம் நிறை



வேறத்தான் செய்கிறது. நியாயமான விருப்பங்கள் நிச்சயமாக நிறைவேறுகின் றன, காலம் கடந்தாவது'' - மதிமந்திரி சுமந்திரன் தனக்குள்ளாக நினைத்தான்.

குலகுரு வசிஷ்டர், மாமன்னன், ஜனகன், விபீஷணன், சுக்ரீவன், குகன், வானரப் படை என்று சபா மண்டபம் நிறைந்திருக்கிறது. மாடங்களில் கோசலை, கைகேயி, சுமித்திரை என்று ராஜ மாதாக் களும், ஊர்மிளை, மாண்டவி, ஸ்ருதகீர்த்தி ஆகிய ராணிகளும், மற்ற அரண்மனைப்



## ப்ளாக் அண்ட் வொயிட் கதைகள்-3

பெண்டிரும் இருந்தபடி விழா வைக் கவனித்துக் கொண்டிருக் கிறார்கள்.

தசரத ராமன், சீதாராமனாக ஆனபோது உண்டான மகிழ்ச்சியைவிட அதிகமான மகிழ்ச்சியை அனைவரின் முகங்களுமே பிரதிபலித்தன.

'ராஜாராமன் வாழ்க!' என்கிற கோஷம் மண்டபத்தை அதிர வைத்தது. அனைவருக் கும் கைகூப்பிய ராமன், தன்னுடைய சிம்மாசனத்தில் இருந்து எழுந்தான். சீதை யும் உடன் நின்றாள்.

தனக்கு உதவிய ஒவ் வொருவரையும் அழைத்து, பரி சளித்து கௌரவிக்கிறான் ராமன்! சீதை எடுத்துத் தருகிறாள்; ராமன் கொடுக்கிறான்.

'மனைவியின் ஒப்புதல் இல்லாமல் செய்யும் விரதம், பூஜை, தானம் எதுவுமே பலனளிக்காது' என்கிறது சாஸ்திரம். அதை 'சரி' என்று உணர்த்துபவனாக நடந்து கொள்கிறான் ராமன்.

வானர வீரர்கள், அங்கதன், சுக்ரீவன்,

விபீஷணன், குகன்... என்று வரிசையாக ஒவ்வொருவராக அழைக்கப்படுகிறார்கள். அவர்களின் அன்பை விளக்கிப் பேசிப் பரிசளிக்கிறான்.

கூட்டம் வியந்து கைதட்டுகிறது.

'மன்னராக முடிசூடினாலும், உதவியவர்களைப் பெருமைப்படுத்தி கௌரவிப்பதில், ராமனின் எளிமையை எவரும் மிஞ்ச முடியாது' என்கிற நிறைவு, அந்த முகங்களில் தென்படுகிறது.

அண்ணனின் அருங்குணத்தை அணு அணுவாகக் கண்டு ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தான் பரதன்.

'எண்ணில் ஆயிரம் ராமரும் நின்கேள் ஆவரோ?' என்று குகனும், 'எண்ணில் கோடி ராமரும் நினக்கு ஈடாவரோ?' என்று கோசலையும் கொண்டாடிய குணக்குன்றான பரதனின் முகத்தில் இனம் புரியாத பரவசம்!

ராமன் அடுத்து அனுமனை அழைக்கின்றான். பரதனின் விழிகளோ உயர்ந்து மாடத்தை நோக்கின. அங்கே கணவன் மீதே விழிபதித்திருந்த மாண்டவியின் மீது பார்வை படிந்தது. மறுகணம், வேகமாய் எழுந்த மாண்டவி படிகளை நோக்கி நடந்தாள்.

'மாண்டவி, எங்கே போகிறாய்?' என்று மற்றவர்களின் குரல் அவளை எட்டுவதற்குள் சரசரவென்று இறங்கினாள். தாதியர் அவள் பின்னே ஓடினர். கூட்டம் வழி விட்டது. பரதனின் பின்புறமாக வந்து நின்றாள். என்ன காரணம் என்று புரியாமல் அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அங்கே அனுமனை இறுகத் தழுவிக் கொண்டிருந்தான் ராமன். சீதைக்குத் துணிவூட்டிக் காப்பாற்றியது; மயங்கிக் கிடந்த தன்னையும், இலக்குவனையும் உயிர்ப்பித்தது... பரதன் தீயில் புகாமல் தடுத்தது... என்று அனுமன் புரிந்த அருஞ் செயல்களால் புளகித்துப் போயிருந்தது ராமனின் மனம்!

உணர்ச்சிமயமான அந்த தருணத்தின் முடிவில், ராமனுக்கு முன் சென்று நின்றான் பரதன். அவன் கரத்தில் ஒரு கிளிக்கூண்டு!

அதைப் பார்த்து சீதையும், ராமனும் மட்டுமல்ல; அனுமனும் பிரமித்துப் போனான். சீதை ராமனிடம் கூறுமாறு அனுமனிடம் சொல்லியிருந்த அடையாளம் அது!

அனுமனை விட, ராமனும் சீதையும் அதிகம் உணர்ச்சி வயப்பட்டவர் என்றால், அதற்கு வேறொரு காரணம் இருந்தது. அது, ஆரண்யத்தில் நடந்த சம்பவம்!

**"பரதா... என்னால் வணங்கப்படுபவர்கள் உன்னால் வெறுக்கப்படுபவராக முடியுமா?" - இனிமையாகவே கேட்டான் ராமன்.**



**சா**ந்தமே உருவான பரதன் அப்போது கொந்தளிப்பில் இருந்தான். கைகேயியின் வரமும், தசரதன் மரணமும், அதனால் ஏற்பட்ட பழியும் அவனை உருக்குலைத்து இருந்தன. தந்தைக்கு ஈமக்கிரியை புரியவும் தடுக்கப்பட்ட நிலையில், அன்னை கைகேயியை வெறுத்து ஒதுக்கினான். ராமனை அழைத்து வரவும் கிளம்பினான்.



சித்திரகூட மலையில் தம்பியும், தமையனும் சந்தித்தனர். கோபத்தின் கொதி நிலையில் கைகேயியை வறுத்தெடுத்தான் பரதன்!

''இந்தப் பழிகாரியின் மகன் என்கிற பழியைவிட, வேறென்ன அவமானம் வேண்டும் எனக்கு? நீங்கள் அரியணையை ஏற்று, என்னைக் காப்பாற்றுங்கள்.''

பரதனின் கண்ணீரும் கோபமும் ராமனுக்குப் புரிந்தன. களங்கமே இல்லாத அவனுடைய குமுறலில் இருந்த நியாயத்தை உணர்ந்தான். என்றாலும், தர்மத்தின் சூட்சுமத்தை பரதனும் ஏற்கும் விதத்தில் உணர்த்தினான். பாதுகையைப் பெற்றுக் கொண்டு புறப்பட்ட தருணத்தில் ராமன் கேட்டான்.

''பரதா... என்னால் வணங்கப்படுபவர்கள் உன்னால் வெறுக்கப்படுபவராக முடியுமா?''

புன்னகை தவழும் முகத்தோடு, இனிமையாகவே கேட்டான் ராமன்.

அதையடுத்து சரேலென்று விழுந்து ராமனின் பாதங்களைப் பற்றிக் கொண்டு விம்மினான் பரதன்.

''அண்ணா, கைகேயியை கவனமாகப் பராமரிப்பேன். உங்கள் அன்புக்குரிய அனைத்தும் என்னுடைய அன்புக்கும் உரியவைதான்!'' கதறிய பரதனை நெஞ்சோடு அணைத்துக் கண்ணீர் சிந்தினான் ராமன்!

அன்னை கைகேயியை மட்டுமல்ல; இன்னொரு கைகேயியும் இருந்தாள். அது தான் கூண்டில் உள்ள இந்தக் கிளி!

திருமணமாகி வந்த பிறகு, சீதை வளர்த்த செல்லக்கிளி!

**சி**னிமா வரலாற்றில் மறக்க முடியாத படம் 'பாலைவனச் சோலை'. ராபர்ட்-ராஜசேகரன் இயக்கத்தில் இருபத்து ஏழு ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்த இப்படம் அப்போது பாடல்களுக்காகவும், கதைக்காகவும் பரபரப்பாகப் பேசப்பட்டது. அதன் பிறகு, தற்போது பழைய படங்களை ரீ-மேக் செய்து கொண்டிருக்கும் வரிசையில் அதே பெயரில் மீண்டும் படமாகிறது.

சுஹாசினி கேரக்டரில் 'திண்டுக்கல் சாரதி' கார்த்திகா நடிக்கிறார். சந்திரசேகர் கேரக்டரில் 'நிதின் சத்யா' நடிக்கிறார். அப் படத்தில் இடம்பெற்ற 'மேகமே... மேகமே...' பாடலை மீண்டும் இப்படத்தில் பயன்படுத்த அதன் இசையமைப்பாளர் சங்கர்-கணேஷ், பாடலாசிரியர் வைரமுத்து இருவரிடமும் அனுமதி கேட்டிருக்கிறார்களாம். இப்படத்தை புதுமுக இயக்குநர் தயாளன் இயக்க, மாருதி பிலிம்ஸ் ஆர். ராதாகிருஷ்ணன் தயாரிக்கிறார்.

\- சத்யா

ஒரு நாள் சீதை ராமனிடம் கேட்டாள்:

''பிரபு... நான் வளர்க்கின்ற இந்தக் கிளிக்கு என்ன பெயர் சூட்டலாம்? நீங்கள் சொல்லுங்கள்?''

ராமன் குறும்புச் சிரிப்புடன் சொன்னான்:

''சீதா, கிள்ளை மொழி பேசும் நீ, கிள்ளை வளர்ப்பதாகச் சொல்வதும் பொருத்தமாகத்தான் இருக்கிறது.''

சீதையின் முகத்தில் பொய்க்கோபம் பொலிந்தது.

''விளையாட்டு இருக்கட்டும். என்ன பெயர் சொல்லுங்கள்?''

தயக்கமே இல்லாமல் வந்தது ராமனின் பதில்:

''என் அன்புக்குரிய அன்னையான கைகேயியின் பெயரை வை!''

அந்தக் கிளி 'கைகேயி' ஆயிற்று.

'ராமா', 'சீதா' என்று எப்போதும் மிழற்றுகின்ற அந்தக் குரலே அவர்களின் உற்சாக நதியைப் பெருக வைத்தது.

நீண்ட நெடிய இந்தச் சம்பவம் சீதைக்குள் கிளைவிட்டுப் பரவியது.

**ப**தினான்கு ஆண்டுகள் கழித்து இதோ மீண்டும்...

'ராமா', 'சீதா', 'ராமா', 'சீதா'...

கிளி மிழற்றுகிறது.

சீதையும், ராமனும் பூரிக்கின்றனர்.

ராமனின் விழிகள் பரதன் மேல் நிலைத்தன.

''ராமா, நீ விரும்பியபடியே நான் நடந்திருக்கிறேன். அன்னை கைகேயியை மட்டுமல்ல; 'கைகேயி' என்று பெயர் சூட்டி சீதை வளர்த்த கிளியையும் உன்னிடம் பத்திரமாக ஒப்படைத்துவிட்டேன். உன் விருப்பமே என் விருப்பம்... எனக்கென்று வேறு விருப்பமில்லை''

பரதனின் விழிகள் பேசின.

அதை உணர்ந்தவனாக பரதனை இறுகத் தழுவினான் ராமன். இருவரின் விழிகளிலும் கண்ணீர் துளிர்த்தது. அதைப் பார்த்த சீதையும் கண்கலங்க நின்றாள்.

கூடியிருந்த மற்றவர்களுக்குத்தான் எதுவும் புரியவில்லை! ●



## அனுபவம்

**எ**ன்னுடைய தங்கை மகன் ராஜன். கலகலப்பான பேர்வழி. அவனுக்கு வாய்த்த மனைவி ராணி. வசதியான வீட்டுப் பெண். அதில் அவளுக்கு இலேசான கர்வமும் உண்டு. சமயம் வாய்க்கும்போதெல்லாம் அவனை மட்டம் தட்டுவாள். ஒரு திருமண நிகழ்ச்சி. உறவினர்கள் அரட்டையில் ஈடுபட்டிருந்தனர். அச்சமயம் ராணி, திடீரென்று பேச்சுக்குள் நுழைந்து, "எனக்கு யோகமான ஜாதகம்; என் வீட்டுக்காரருக்கோ கழிசடையான ஜாதகம்'' என்று மெலிதான மறைமுகத் தாக்குதலைத் துவக்கினாள். ராஜனும் மெல்லச் சிரித்துக் கொண்டு, அதை ஆமோதிப்பது போல், ''என் மனைவி சொல்வது உண்மைதான். யோகக்காரிக்கு நான் கிடைத்தேன்; கழிசடையான எனக்கு அவள் கிடைத்தாள்'' என்று சொல்லவும் கூட்டத்தில் சிரிப்பு வெடித்தது.

– துரை. ராஜசேகரன், பொள்ளாச்சி



# கர்மம்

## அருள்வாக்கு

கர்மம் செய்கிறவனிடம் பகவான் பிரீதி அடைவானா, பூஜை செய்கிறவனிடம் பிரீதி அடைவானா? ஒரு பிரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் வேலை எதுவும் செய்யாமல் அந்தப் பிரபுவை ஸ்தோத்திரம் செய்து கொண்டே இருக்கிறான். இன்னொருவன் வெகு நேர்த்தியாக வேலை செய்கிறான். என்றாலும் அந்தப் பிரபுவிடம் துளிக்கூட அன்போ பாசமோ காட்டாமல் வேலையை மட்டும் கவனிக்கிறான். சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு அருகில் நின்று ஸ்தோத்திரம் பண்ணுகிறவன்தான் பிரபுவின் பிரீதிக்குப் பாத்திரமாக முடியும் என்று தோன்றும். பிரபு அசடாக இருந்தால் இப்படியே நடப்பான். ஆனால் அவன் புத்திசாலியாக இருந்தால் கண்ணில் படாமல் வேலை செய்கிறவனிடமே அதிகப் பிரியத்துடன் இருப்பான். ஈசுவரன் அசட்டுப் பிரபு இல்லை. தன்னை ஸ்தோத்திரம், பூஜை செய்கிறான் என்பதால் மட்டும் ஒருவனுக்கு அவன் அனுக்கிரகம் செய்துவிட மாட்டான். தான் விதித்த கர்மங்களைச் செய்கிறவர்களிடமே அதிகப் பிரீதி கொள்வான். ஆனாலும் அந்தக் கர்ம மார்க்கக்காரன் மனசில் அன்பே இல்லாமல் 'வெட்டு வெட்டு' என்று வேலை மட்டும் செய்தால் அவன் பகவத் பிரீதியின் ஆனந்தத்தைப் பூரணமாக அனுபவிக்க முடியாது. 'இது பகவான் செய்த லோகம். சர்வலோக ராஜாவான பகவானின் குடிமக்களே ஜனங்கள் அத்தனை பேரும். நாமும் அவனுடைய பிரஜை. எனவே இவர்களெல்லாம் நம்மைச் சேர்ந்தவர்கள், நம் சகோதரர்கள். ராஜாவாக இருக்கிறதோடு இவனே நம் அம்மையும் அப்பனும். நாம் அத்தனை பேரும் அவனுடைய குழந்தைகள், ஆதலினால் ஒருத்தருக்கொருத்தர் சகோதரர்கள். சௌஜன்யமாக வாழ வேண்டுமென்றே நமக்கு வேத தர்மம் வெவ்வேறு காரியங்களைப் பிரித்துக் கொடுத்திருக்கிறது. அதை நம்முடைய சொந்த ஆசைகள், லாபங்களை நினைக்காமல் செய்து பகவானின் குடும்பம் ஒழுங்காக நடக்கச் செய்வதே நம் கடமை. இந்த உணர்ச்சி வருகிறபோது அதிலேயே ஈசுவர பக்தியும் உட்புகுந்து நிற்கும். இப்படி பக்தி உணர்வோடு கர்மம் செய்தாலே பகவத் கிருபையைப் பூரணமாகக் கிரகிக்க முடியும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

**மேஷம் :** மனநிறைவான வாரம். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிடைக்கும். பண வசதிக்குக் குறைவு இல்லை. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். குழந்தைகள் மூலம் சுபகாரியம் கூடிவரும். நீண்ட காலக் கடன் பிரச்னை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும்.

**ரிஷபம் :** மிகவும் உல்லாசமான வாரம். வெளியூர் பிரயாணம் செல்ல வேண்டி இருக்கும். திருமணக் காரியம் நிறைவேறும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். மகான்களின் தரிசனம் கிட்டும். வெளிநாட்டு மனிதர்கள் மூலம் நற்பலன் உண்டாகும். பரீட்சையில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். எதிர்பார்க்கும் துறையில் வேலை கிட்டும்.

**மிதுனம் :** இன்பமும் துன்பமும் நிறைந்த வாரம். கைப்பொருள் மீது கவனம் தேவை. யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. கடன் தொல்லை அதிகரிக்கும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வேலை பளு அதிகரிக்கும். புதிய தொழில் முயற்சியை சற்றுத் தள்ளிப் போடவும்.

**கடகம் :** மிகவும் நற்பலன் நிறைந்த வாரம். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். கணவன் - மனைவிக்குள் இருந்து வந்த கருத்து வேற்றுமை தீர்ந்து சுமுகமான நட்பு உண்டாகும். பண வசதி பெருகும். வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். வீட்டில் சுபத் தேவைகள் வந்து சேரும்.

**சிம்மம் :** மிகவும் எச்சரிக்கையான காலம். கூட இருப்பவர்கள் நமக்குக் குழி வெட்டுவார்கள். வேலையில் அவசரப்பட்டு விடக் கூடாது. மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். தேர்வில் அதிக மதிப்பெண் பெறுவீர்கள். அவசரப்பட்டு வேலையை விடக் கூடாது. கடன் சுமை அதிகரிக்கும். புதிய தொழில் முயற்சி தள்ளிப் போடவும். உடல் ஆரோக்கியம் தொந்தரவு தரும்.

**கன்னி :** ஆனந்தமான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். ஆடை அலங்காரப் பொருட்கள் வாங்குவீர்கள். தேர்வில் அதிக மதிப்பெண் கிட்டும். பண வசதி பெருகும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். கடன் பிரச்னை தீரும். புதிய வேலை வாய்ப்பு கூடிவரும். வழக்கு வெற்றி அளிக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**துலாம் :** எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். சுபச்செலவுகள் தேடி வரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மாணவர்கள் நல்ல மதிப்பெண்கள் பெறுவீர்கள். திருமணக் காரியம் கைகூடும். புதிய வீடு / மனை வாங்க உகந்த காலம். வியாபாரத்தில் அபரிமித லாபம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். நீண்ட காலம் முடிவு பெறாமல் இழுத்தடித்த வழக்கு வெற்றி பெறும்.

**விருச்சிகம் :** ரொம்பவும் மகிழ்ச்சிகரமான வாரம். நண்பர்களுடன் உல்லாசமான பிரயாணம் செல்வீர்கள். குலதெய்வப் பிரார்த்தனை செய்து முடிப்பீர்கள். கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சுபகாரியப் பேச்சு வார்த்தை பலிதமாகும். சுமையான வேலை எளிதாக முடியும். புண்ணிய ஸ்தலம் சென்று மகான்களை தரிசிக்க நேரிடும்.

**தனுசு :** திருமணக் காரியம் நிறை

**தஞ்சை பரத்வாஜ்** **26.04.09 முதல்**

வேறும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். பணவசதி பெருகும். சமுதாயத்தில் நல்ல மதிப்பு மரியாதை கூடும். கடன் தொல்லை தீரும். கல்வியில் நல்ல மதிப்பெண் கிட்டும். குடும்ப வாழ்வில் இருந்து வந்த மணக் கசப்பு விலகும். கடன் தொல்லை தீரும். கல்வியில் நல்ல முன்னேற்றம் கிட்டும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும்.

**மகரம் :** கஷ்டத்தின் பிடியிலிருந்து விடுதலை கிட்டும். முயற்சிக்கும் காரியம் போராட்டத்துக்குப் பின் வெற்றி தரும். வழக்கு வெற்றி பெறும். கணவன் - மனைவிக்குள் மனக்கசப்பு விலகும். வேலையில் பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் மந்தமான போக்கு விலகும். யாருக்கும் ஜாமீன் போடுவதோ, கடன் கொடுப்பதோ கூடாது.

**கும்பம் :** மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் மிகுந்து காணப்படும். நவீனப் பொருட்கள் வாங்குவீர்கள். வராத நிலுவை வந்து சேரும். கடன் சுமை தீரும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்று விரும்பிய துறையில் சேர்வீர்கள். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும்.

**மீனம் :** ஆறுதலான வாரம். மன மகிழ்ச்சி ஏற்படும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். வீட்டில் சுபகாரியம் நடக்கும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். நண்பர் / உறவினர் மூலம் உதவி கிட்டும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். நவநாகரிகப் பொருட்கள் வாங்குவீர்கள். வேலையில் நற்பெயர் உண்டாகும்.

...05.09 வரை



# 70 முதல் 7 வரை - 11

# அலைகள் ஓய்வதில்லை!

கல்கி ராஜேந்திரன்

கனிமொழி முதல் வரிசையில் அமர்ந் திருந்ததால்தானோ என்னவோ அன்று கிருஷ்ணகான சபையில் சஞ்சய் சுப்பிர மணியம் கச்சேரி, கிட்டத்தட்ட தமிழிசைக் கச்சேரியாகவே மாறிவிட்டது. இப்போ தெல்லாம் கர்நாடக சங்கீத வித்வான்கள், கச்சேரியில் சில தமிழ்ப் பாடல்களையும் பாடினால்தான் தமிழர்கள் மிகுதியாக உள்ள அவையில் அவர்கள் இதயங் களைத் தொட முடியும் என்று உணர்ந் திருக்கிறார்கள். அன்று சஞ்சய் தேஷ் ராகத்தில், ''துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து நீ, இன்பம் சேர்க்க மாட்டாயா?'' என்று தொடங்கும் பாரதிதாசன் பாட லைப் பாடியது முதல் வரிசைப் பிரமுகருக்காகவே இருந்திருக்கலாம். அதன் பலன் அன்றைய ரசிகர்கள் எல் லோருக்குமே கிடைத்தது. என்றாலும் அந்த ராகமும் பாட்டும் என்னை ரொம் பவே நெகிழச் செய்ததற்குக் காரணம் உண்டு.

ஓர் இரவு நாடகத்துக்கு விமர்சனம் எழுதி, அண்ணாதுரை அவர்களுக்கு 'தமிழ்நாட்டின் பெர்னார்ட்ஷா' என்ற பட்டமும் அந்த விமர்சனத்தி லேயே வழங்கிய 'கல்கி', ஓர் இரவு திரைப்படத்துக்கு விமர்சனம் எழுதவில்லை. ஆனால் படத் தைப் பார்த்தார். என்னையும் உடன் அழைத்துப் போனார். படத்தைப் பற்றி அவர் என்ன எண்ணினாரோ, தெரி



✱ துன்பம் நேர்கையில் - சஞ்சய் சுப்பிரமணியம்

யாது; ''துன்பம் நேர்கையில்'' பாடல் அவர் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண் டது மட்டும் நன்றாகத் தெரியும். அந்த டியூனை 'ஹம்' பண்ணி, ''எவ்வளவு அழகான ராகம்; என்ன அருமையான பாடல்'' என்று அடிக்கடி கூறிக்கொண் டிருந்தார்.

சிதம்பரத்தில் ஒரு விழாவுக்குப் போய் விட்டுக் காரில் திரும்பும்போது அதே தேஷ் ராகத்தில், ஒரு பாடலை இயற்றி னார். ஓர் அடியை அவர் உருவாக்க, சகோதரி ஆனந்தி பாடிக் காட்ட, 'கல்கி' திருத்திச் செப்பனிட, பாடல் வளர்ந்து கொண்டே வந்து, சென்னையை அடை வதற்குள் பூர்த்தியாகி விட்டது:

''சோர்வு கொள்ளாதே மனமே - உன்
ஆர்வமெல்லாம்
ஒருநாள் பூரணமாகும்''
என்று தொடங்கி, நமது இசை மரபுக்கு ஏற்ப,
''அம்பிகை பாலன் வள்ளிமணாளன்
விரைவினில் வருவான்
இன்னருள் புரிவான்''
என்று இறையுணர்வோடு முடியும். (காண்க: கல்கி பாடல்கள் - வானதி பிரசுரம்).



* ஓர் இரவு - அண்ணா

அந்த சென்னை-சிதம்பரம்-சென்னை பயணத்தின்போது காரில் உடனிருந்த எனக்கு, அந்தப் பாடலும் அது அமைந்த ராகமும் ரொம்பவும் பிடித்துப்போனதில் வியப்பில்லைதானே. அந்தக் காலகட்டத்தில் 'கல்கி', திரைக்கதைகளிலும் மாணவர் சமுதாயத்திலும் நிலவி வந்த தோல்வி மனப்பான்மையைக் கண்டித்து நிறைய கட்டுரைகள் எழுதி வந்தார். எனவேதான் பாடலும், ''சோர்வு கொள்ளாதே மனமே'' என்று தொடங்கி, ''காரிருள் சூழ்ந்த நீளிரவின் பின் காலை மலர்தல் கண்டனை அன்றோ'' என்று நம்பிக்கை ஊட்டுவதாக அமைந்தது. இந்தப் பாடலை குருசரன் அவ்வப்போது தமது கச்சேரிகளில் பாடி வருகிறார்.

என் மனசுக்கு ரொம்ப நெருக்கமான இன்னொரு ராகமும் உண்டு. 'சகானா அளித்த ஏமாற்றம் காரணமாகவே அந்த ராகம் என் மனசில் இடம் பிடித்தது' என்றால் நண்பர் கே.பி. கோபித்துக் கொள்ளக்கூடாது! இந்த விஷயமே வேறு.

கல்கி அவர்களுக்கும் அவருக்குள் குடியிருந்த ஆஸ்துமாவுக்கும் தூசி கொஞ்சமும் ஒத்துக் கொள்ளாது. என்றாலும் சிறுவனாகிய என் நச்சரிப்புக்கு இணங்கி அப்பா என்னை ஒரு சமயம் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நடந்த பொருட்காட்சிக்கு அழைத்துப் போனார். டிக்கெட் வாங்கி உள்ளே நுழையும் போதே நாதசுவர இசை கேட்டது. தொலைவில், பொருட்காட்சியின் திறந்த

**கல்கியின் பாடல்களுக்கு உள்ள ஒரு தனிச் சிறப்பு- பக்தி உணர்வுடன் இலக்கிய நயமும் மிகுந்து இருப்பதுதான்!**

* ''பாட்டு சொல்லப் போறேன்'' - டி.கே.சி.





வெளி அரங்கில், நடந்து கொண்டிருந்த கச்சேரி, மைதானம் முழுவதும் ஒலி பெருக்கி மூலம் பரவிக் கொண்டிருந்தது. யார் வாசிக்கிறார்கள் என்பதை நுழை வாயிலில் இருந்தபடி காண முடியாது. ஆனால் வாத்தியம் கையாளப்பட்ட விதத்திலேயே 'கல்கி', வித்வான் யார் என்பதை ஊகித்திருக்கலாம்.

''சகானா ரொம்ப நன்னா வாசிக்கிறார்; கொஞ்ச நேரம் கேட்டுட்டு அப்புறம் கடைகண்ணியெல்லாம் சுற்றிப் பார்க்க லாம்'' என்ற 'கல்கி' மைதானத்தில் நடமாட்டமில்லாத ஓரமான பகுதியில் புல்தரையில் அமர்ந்துவிட்டார். விரிவான ராக ஆலாபனை, கீர்த்தனை, நிரவல், சுவரப்பிரஸ்தாரம் என்று நாதசுவரக் கலைஞர் அமர்க்களப்படுத்திக் கொண் டிருந்தார். தவில் வித்வான் தனிஆவர்த் தனம் ஆரம்பித்து சில நிமிடங்கள் ஆன தும் அப்பா எழுந்து, ''அடடா ரொம்ப நேரமாச்சு; இன்னொரு நாள் மறுபடி வர லாம்'' என்று கூறியபடியே வந்த வழி திரும்பினார். எனக்கோ ரங்கராட்டினத் தில் குதிரை சவாரி செய்ய முடியாமல் போனதில் ஏற்பட்ட ஏமாற்றம் கொஞ்ச நஞ்ச மல்ல. ''இன்னொரு நாள் வருவதாவது? அப்பா வுக்கு இருக்கும் வேலைச்சுமையில் அது நடக்கிற காரியமா?'' என்று எனக்குள் நொந்து கொண்டேன்.

ஏமாற்றம் ஒருபுற மிருந்தாலும் இசையில் மெய்மறப்பது என்றால் என்ன என்பது அன்று எனக்குப் புரிந்தது. நாதசுவர இசையில் 'கல்கி'க்கு ஓர் அலாதியான ஈடுபாடு இருப்பது தெரியவந்தது. அவருடைய சிறுகதைகளில் அவ்வப்போது, தூரத்தில் சோகமாகவோ அல்லது குதூகலமாகவோ ஒலித்த நாதசுவர இசை இடம்பெறும். அது எதனால் என்பது விளங்கியது. இன்றைக்கும் சகானா ராகம் ஒலிக்கக் கேட்கும்போதெல்லாம் திருவழுந்தூர் சிவக்கொழுந்து கதையையும், அதை கல்கிக்குக் கூறிய தவில் கந்தப்பப் பிள்ளை யையும் என்னால் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியாது.

தமது இசை ஞானத்தைக் காட்டிலும் இசைப் பிரேமையினால் கலைஞர்கள் போற்றும் ரசிகராய், உயர்ந்தார் 'கல்கி'. அவர்கள் பெரிதும் மதித்த விமர்சகராக வும் திகழ்ந்தார்.

இசையுடன்கூடிய பாடல்கள் புனைந்த வாக்கேயக்காரர் இல்லாவிட்டாலும், அவர் சிறந்த பாடலாசிரியர். அதிலும் மெட்டுக்குப் பாட்டு அமைப்பது அவ ருக்கு இயல்பாகவே வந்த கலை. தமி ழிசை இயக்கம் தோன்றிய ஆரம்ப நாட் களில் சதாசிவம், நண்பர் 'கல்கி'யிடம், ''குஞ் சம்மா (எம்.எஸ்.) கச்சேரி யின் ஆரம்பகட்டத்தில் பாடுவதற்கு ஏற்ப ஹரி காம்போதி அல்லது ஸ்ரீரஞ்சனி ராகத்தில் ஒரு தமிழ்ப் பாட்டு வேண் டும்'' என்று கேட்டுக் கொண்டார். அதன் விளைவுதான் ''வண் டாடும் சோலை தனிலே'' என்று தொடங் கும் ஹரிகாம்போதி ராகப் பாடல். அது எம்.எஸ்.அவர்களின் குர லில் இசைத் தட்டாகவும் வெளிவந்து அந்நாளில் மிகப்

**கல்கியின் 'பூங்குயில்' பாடலைப் பாடிய டி.கே.பட்டம்மாளுக்கு 'பூங்குயில் பட்டம்மாள்' என்ற பட்டத்தைப் பெற்றுத் தந்தது!**



* சோர்வு கொள்ள (மனமே) - ஆனந்தி



பிரபலம் அடைந்தது. இன்றைக்கும் சில கச்சேரிகளில் அவ்வப்போது ஒலிக்கிறது. அந்தப் பாடல், தியாகையரின் 'உண்டே தி ராமுடொகடு' என்று தொடங்கும் கீர்த்தனையின் மெட்டில் அமைந்ததுதான்.

ஒரு சமயம் டி.கே.நாகராஜனும் (டி.கே.பட்டம்மாள் அவர்களின் சகோதரர்) கல்கி கிருஷ்ணமூர்த்தியும் கடல் ஓரமாகக் காற்று வாங்கியபடியே மணலில் அமர்ந்திருந்தார்கள். ''இந்த அலைகள் இப்படி ஓயாமல் பொங்கி எழுந்து விழுகின்றனவே, ஏன் மாமா?'' என்றார் நாகராஜன். சிறுவனுக்குப் பதில் சொல்லும் விதமாக, அப்போதே 'கல்கி', ''திரைகடல் தூங்காதோ - அம்மா; அலை ஓயாதோ!'' என்று தொடங்கும் பாடலை இயற்றினார். அது, அந்த நாளில் ரொம்பப் பிரபலமாயிருந்த ஒரு ஹிந்துஸ்தானி பாட்டின் மெட்டில் அமைந்தது. (ந ஜானே க்யா ஹை தில் கி பாத்...) 'திரை கடல்' டி.கே.பி.யின் வசீகரக் குரலில் இசைத்தட்டில் பதிவாகி, தமிழகமெங்கும் ஒலித்தது. 'கல்கி' உருவாக்கிய மற்றொரு பாடல் 'பூங்குயில்', டி.கே.பட்டம்மாளுக்கு 'பூங்குயில் பட்டம்மாள்' என்ற பட்டத்தையே பெற்றுத் தந்தது.

'பக்த மீரா' திரைப்படப் பாடல்கள் பல 'கல்கி' அவர்களால் இயற்றப்பட்டவை. அவற்றுள் 'மறவேனே எந்நாளிலுமே' என்ற பாடல் பரஸ் ராகஜாவளியான 'செலிநேநேட்லு ஸஹிந்துனே' என்பதன் மெட்டில் அமைந்தது. இப்படியே பல பாடல்களைப் பற்றிச் சொல்லிக்கொண்டு போகலாம் என்றாலும், இன்றைக்கும் ரசிகர்களை பரவசத்தில் ஆழ்த்துகிற கல்கியின் பாடல் என்றால் அது 'காற்றினிலே வரும் கீதம்'தான். மீரா திரைப்படத்தில் எம்.எஸ்.அவர்களால் பாடப் பெற்று சாகாவரம் அடைந்து விட்ட அந்தப் பாட்டும் கூட 'டுடு கமி மன பீனா' என்ற ஹிந்துஸ்தானி பாடல் மெட்டில் அமைந்ததுதான். ஆனால் ஹிந்துஸ்தானி பாட்டை இன்று யார் நினைவில் வைத்திருக்கிறார்கள்?

கல்கியின் பாடல்களுக்கு உள்ள ஒரு தனிச் சிறப்பு, பக்தி உணர்வுடன் இலக்கியநயமும் மிகுந்திருக்கும் என்பதுதான். 'மாலைப் பொழுதினிலே' பாட்டில் இவை இரண்டுடன் 'கல்கி'யின் கதை சொல்லும் ஆற்றலும் கலந்திருக்கிறது! இந்தப் பாடல் கல்கி தீபாவளி மலரில் முதன் முதலாகப் பிரசுரமானபோது, 'கல்கி' தமது பெயரை அதில் பதிவுசெய்யவில்லை. ஆனாலும் என்ன, அதைக் 'கல்கி'தான் எழுதியிருக்க வேண்டும் என்று டி.கே.சி. கண்டறிந்து கடிதம் எழுதினார்! ரசிகமணி ஆயிற்றே!

அத்துடன் நில்லாமல் டி.கே.சி., சென்னைக்கு வந்த சமயம், ''பாட்டு சொல்லப் போறேன்'' என்று அறிவித்து கல்கி குடும்பத்தினருக்கும் மற்றும் நண்பர்களுக்கும் அழைப்பு விடுத்தார். கம்பனை எதிர்பார்த்து வந்து அமர்ந்த அனைவருக்கும் வியப்பான வியப்பு!

ரசிகமணி, 'மாலைப் பொழுதினிலே' பாடலை உணர்ச்சிபூர்வமாகத் தமக்கே உரிய தனிப்பாணியில் ராகம் போட்டுப் பாடிக் காட்டி மகிழ்ந்தார், மகிழ்வித்தார்.

கல்கியின் பாடல்களில் உள்ள இலக்கியநயத்துக்கு இதைவிடவும் வேறு சான்றிதழ் எதற்கு?

**(அடுத்த வாரம்: தார்மிகக் கோபங்கள்!)**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு- ரூ.5,000/-**

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

**விதிமுறைகள் :**

* கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
* சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
* அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை; போட்டி முடிவு வெளியாகும் வரை எழுது வதில்லை என்று உறுதிமொழி தரவேண்டும்.
* படைப்பாளி முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவ தொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
* முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
* தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக் கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
* போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
* பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**

**கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.**

* **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.**
* **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.**

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**- ஆசிரியர்**






# உள்ளே சில உலகங்கள்!

அண்மையில் மணிக்கொடி எழுத்தாளர் பி.எஸ்.ராமையாவைப் பற்றிய தொலைக்காட்சி நிகழ்ச்சிக்காக அசோகமித்திரனிடம் பேட்டி கண்ட போது, ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். ராமையாவுக்கு குதிரைப் பந்தயத்தில் மிகுந்த ஈடுபாடு. கையில் கிடைக்கிற பணத்தையெல்லாம் குதிரை மீது கட்டி விடுவார். ராமையாவும் கதைகளும் போல, ராமையாவும் குதிரைகளும் என்று கூட ஒரு கட்டுரை எழுதலாம் என்று அசோகமித்திரன் கூறினார். மேலும் அவரது கருத்தாக மிகவும் தாழ்ந்த குரலில், ''எழுதுபவனுக்கு பணமே வர்றதில்லை. அதனால்தான் எழுதும்போது 20 ரூபாய் கிடைத்தால் அதில் பத்தொன்பதே முக்கால் ரூபாயை செலவழிச்சுட்டுத்தான் மறுவேலை'' என்றார்.

'எக்ஸன்ட்ரிக்' என்ற கதையில், வாங்கிய சம்பளம் முழுவதையும் ஒரே நாளில் செலவழிக்கும் குமாஸ்தாவைக் காட்டினார் கிருஷ்ணன் நம்பி.

இந்தப் பிரச்னை எழுத்தாளர்களுக்கு மட்டுமானது அல்ல. அநேகமாக ஐந்தாயிரம் முதல் இருபதாயிரம் வரை சம்பாதிக்கக் கூடிய அனைத்து மக்களுக்குமானதுதான். வருமானமே இல்லாதவர்களின் நிலைமையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

வாழ்க்கை நமக்குத் தந்திருப்பது ஒரு கையேந்தி பவனில் சாப்பிடுவதற்கான பொருளாதாரத்தை. ஆனால், நாம் மனைவி, குழந்தையுடன் ஆட்டோவிலோ டூவீலரிலோ போய் சரவண பவனில் சாப்பிடத்தான் ஆசைப்படுகிறோம்.

ஒரு படம் பார்க்கப் போகலாம் என்றால், தியேட்டர்கள் யாவும் மல்டிஃபிளக்ஸ்களாக மாறிக் கொண்டிருக்கின்றன. 2 ரூபாய் 90 காசுக்கு தேவியில் பல ஆங்கிலப் படங்களையும், அலங்கார் தியேட்டரில் 'குர்பானி' போன்ற இந்திப் படங்களையும் பார்த்து ரசித்த காலம் இனி இல்லை. (இப்போது 2.90 டிக்கெட்டுக்கே காசு இருக்காது என்பது வேறு விஷயம்!) இப்போது டிக்கெட் விலையே 100 ரூபாயிலிருந்து தான். இடைவேளையில் பாப்கார்ன் அல்லது கூல் டிரிங்க்ஸ் வாங்க நினைத்தால் 80 ரூபாயாம்!

தேவையற்ற பகட்டு, ஆடம்பரம், கையில் கிரெடிட் கார்டுகள் இருக்கும் அசட்டுத் துணிச்சலில் நாம் நமது தலையிலேயே மண் அள்ளிப் போட்டுக் கொண்

செந்தூரம் ஜெகதீஷ்

டோம் என்றே தோன்றுகிறது. இதன் காரணமாக வீராவேசமாக வேலையை விட்டு உதற முடியாத அடிமைகளாகவும் ஆகிப்போனோம். எதிர்காலம் ஒரு மாயை, இதோ இந்தக் கணம் மட்டுமே நிஜம். இதை முழுமையாக வாழ்ந்து விட வேண்டும் என்று துடிக்கிறோம். நமது குடும்பத்தினரும் நண்பர்களும் நம்மை மதிக்க வேண்டும் என்பதற்காக நாம் நமது உண்மையான மதிப்பீடுகளைப் படிப்படியாக இழந்து கொண்டிருக்கிறோம். வயல் காட்டிலும் ஆத்து மேட்டிலும் நடந்தே போய், மாலை நேரங்களில் தியேட்டருக்குப் போய், அங்கிருந்த நாகமரத்திலிருந்து பழம் பறித்து, மண்ணை ஊதி, சட்டையில் துடைத்து - ஜாக்கிரதையாக அதன் வயலட் நிறம் சட்டையில் ஒட்டாத வகையில் சட்டையின் அடி நுனியில் உள் பக்கமாக பழத்தைத் துடைத்து-பேப்பரில் மடித்து வைப்போம் இடைவேளையில் சாப்பிட. அல்லது கடலைமிட்டாய், தேங்காய் பர்பி, கமர்கட், முறுக்கு என எதையாவது வாங்கிக் கொள்வோம். இதில் அதிக செலவு ஆகாது. தெரிந்தோ தெரியாமலோ பல கிராமிய மற்றும் சிறுதொழில்களுக்கு நாம் அதன் மூலம் ஊக்கமளித்து வந்தோம்.



இன்று நமது குழந்தைகளின் உலகம் கூட மிகவும் மாறிப் போயிருக்கிறது. கில்லியும் கோலியும் தொலைந்து போய் கிரிக்கெட்டும், ஃபுட்பாலும் இடம் பிடித்துக் கொண்டன. நூலகங்களுக்குப் பதிலாக தொலைக் காட்சிப் பெட்டிகள். சீரியல்களுக்குப் போட்டியாகச் சிரிப்பு சேனல்கள். பக்கம் பக்கமாக பைண்டு செய்து படித்த தொடர்கதைகள் பழைய பேப்பர் கடைகளுக்குப் போய் விட்டன.

* செந்தூரம் ஜெகதீஷ்



உலகப் பொருளாதாரம் சரிந்து விட்டதாம். இந்தியப் பொருளாதாரம் சீரான வளர்ச்சியுடன் இருக்கிறதாம். ரிசர்வ் வங்கி 25 பைசா வட்டி குறைத்தால் அது தலைப்புச் செய்தியாகிறது. தனியார் வங்கிகள் சைலண்ட்டாக வட்டியை இரண்டு மடங்காக உயர்த்தினால் அது பற்றி யாரும் கவலைப்படுவதாக இல்லை. வீட்டுக் கடன், கல்விக் கடன், வாகனக் கடன், வீட்டு உபயோகப் பொருட்கள் வாங்க கடன் என எல்லாவகையான கடன்களுக்கும் கப்பம் கட்டும் குறுநில மன்னர்களாக ராஜபோகம் புரிகின்றோம். உலகம் முழுவதும் விரிக்கப்படும் மிகப் பெரிய ராட்சத வலையை நமது விரல்களாலேயே பின்னிக் கொண்டிருக்கிறோம் அதில் நாமே விழப் போகிறோம் என்பதை அறியாமல். கடைசியில் ஏதோ ஒரு

காரணத்துக்காக நாம் கையறு நிலைக்கு ஆளாகும்போது, (கடைசியில் துண்டனா தான்) சுஜாதாவின் ஊஞ்சல் நாடகத்தில் வரும் பெரியவர் கேட்பது போல, 'ஒரு பதினஞ் சாயிரம் ரூபாய்க்கு வக்கற்றவனாகிப் போனேன் நான். என்னை நம்பி யாரும் பதினஞ்சாயிரம் தர மாட்டார்களா?' என்று புலம்ப நேரிடுகிறது.

**வா**ழ்க்கையைத் திட்டமிட்டு வாழ்பவர் கள் வாழவே இல்லை என்றும் கூறிவிடலாம். கையில் டிஃபன் பாக்சில் தயிர்சாதம் கட்டி காலை ஏழு மணி முதல் இரவு பத்து மணி வரை உழைத்து வந்து பணம் சம்பாதிக்கும் பேர்வழிகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். திடீரென அவர்கள் விழித்துக் கொள்ளும் போது, இளமை போய்விட்டிருக்கும் பரிதாபம் நிறைந்தது அவர்களது வாழ்க்கை.

அளவுக்கு மீறிச் செலவிடுபவர்களின் உலகத்தில், வாழ்க்கையோ கனவு மயமானது. அவர்களுக்கு எப்போதாவது யதார்த்தத்தின் சூடு கிடைக்கும்.

**இ**ன்னொரு உலகம் உண்டு. அது தன்னிடம் சேர்ந்த செல்வத்தை, இல்லாதவர் களுக்கும் தேவையுடையவர்களுக்கும் எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் பகிர்ந்து அளிப்பதன் பேரானந்தத்தை உணரும், உண்மை வாழ்வு. அத்தகைய மனிதர்களை, கோயில் கட்டிக் கும்பிடலாம். அவர்களின் கனவும் யதார்த்தமும் வெவ்வேறு அல்ல. யதார்த்தம் அவர்களின் அஸ்திவாரம் என்று சொன்னால், கனவு அவர்களின் கூரை. அன்பு எல்லோரை யும் உள்ளே அழைக்கும் வாசல்.

சுயநலம் மிகச்சிறிய உலகம். அதில் ஒரே ஒரு மனிதன் மட்டும் வாழ்கிறான் என்று எப்போதோ படித்தது ஞாபகம். நமக்குள் எத்தனை சிறிய உலகங்கள்? நாம் எந்த உலகத்து மனிதர்கள்? நமக்கு நாமே ஒரு டிக் போட முடியுமா?... யோசியுங்களேன்!

## போட்டோ போட்டி முடிவு!

**க**ல்கி 12.04.09 இதழில் வெளியான போட்டோ போட்டியில் தேர்ந்தெடுக் கப்பட்ட கமெண்ட் மற்றும் கவிதை இதோ. இவர்களுக்குப் புத்தகம் பரிசாக அளிக்கப் படுகிறது.





### நச் கமெண்ட்ஸ்

''வெய்யிலுக்கு இதமா ஒரு ஐஸ்க்ரீம் வாங்கித் தர முடியல. நீயெல்லாம் ஐலவ்யூ சொல்ல வந்துட்டே போய்யா... போ...போ!''

**- அனார்கலி, தஞ்சாவூர் -4**

### ஜிலீர் கவிதை

*மனிதன் ஆடு என்றால்*
*நீ ஆடுகிறாய்*
*ஓடு என்றால் ஓடுகிறாய்*
*அவன் தரும் உணவை*
*உண்டு கடைசியில்*
*அவனுக்கே உணவாகிறாய்*
*அவன் வலிய அழைத்துத்*
*தரும் உணவை உண்டாலும்*
*இறக்கைகள் இருக்கும் வரை*
*எனக்கு இல்லை கவலை!*

**- மு. மதிவாணன், அரூர்**

# தீராத விளையாட்டு விட்டலன்

**நா**ங்கள் தங்கியிருந்த கஜானன் மஹராஜ் மடத்தி லிருந்து சுமார் ஏழு நிமிடங் கள் வேகமாக நடந்து, விட்டலனின் ஆலயத் திருவாயிலை அடைந்தோம்.

''ஆலயத்துக்குள் பை, புகைப்படக் கருவி, கைபேசி எதையுமே எடுத்துச் செல் லக்கூடாது'' என்றார் அங்கிருந்த காவலர். அருகிலிருந்த சிறு கடை ஒன்றில் 'உங்கள் உடைமைகளைப் பாதுகாக்க லாக்கர் வசதி உண்டு' என்று எழுதப்பட்டிருந்தது. அரு கில் சென்று விசாரித்தபோது, ''லாக்கர்னு எதுவும் இல்லை. ஆனால் லாக்கரை விட பத்திரமா பார்த்துக்குவோம்'' என்றார் அந்தக் கடைக்காரர்!

அவரிடம் உடைமைகளை ஒப் படைத்துவிட்டு, ஆலயத்தில் நுழைந்தவு டன் இடப்புறமாக செந்தூரத்தில் கணபதி காட்சியளித்தார். அடுத்து பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் அடங் கிய வடிவமான தத்தாத்ரேயரின் திருவுரு வம். பின்னர் அனுமன், (இலங்கைக் குப்) பாயத் தயாரான கோலத்தில் தென்பட்டார்.

இரவு மணி பத்தரையைத் தாண்டியிருந்த அந்த நேரத்தி லும் பலர் கோயி லில் காணப்பட்ட னர். கீர்த்தனம் பாடும் ஒலி கேட்டது. ஆண்களில் மிகப் பலரும் தலையில் குல் லாய் அணிந்திருந்தனர். வேறு சிலரோ, பிரம்மாண்டமான தலைப் பாகை! எங்கும் மராத்திய மண் வாசனை.

வரிசையில் நின்றபடி சுற் றும் முற்றும் பார்த்தோம். கட்ட டத்தின் பக்கவாட்டில் பல தளங்கள். அவற்றில் பல தடுப்புகள். ''ஏகாதசியில் வந் தால் அவற்றில் வரிசையில் மணிக்கணக்கில் காத்திருந்துதான் தரிசனம் செய்ய வேண்டியிருக்கும். அதுவும் ஆடி மாத ஏகாதசி என்றால் திருப்பதி கூட்டம் தான்.''



* பக்த துகாராம்- ''என் மனம் உன் வனப்பு கண்டு அடிமையாகி விட்டது...''

அருணா சரண்யா

# ‘பாத ஸ்பரிச தரிசனம்’

பெரிய அளவில் இருந்த இரு சின்னத் திரைகளில், ஒன்றில் விட்டலனும், மற்றொன்றில் ரகுமாயி தாயாரும் காட்சியளித்தனர். அதாவது கருவறைக் காட்சிகளை நேரில் தரிசிக்கும் முன் வரிசையில் காத்திருக்கும்போதே திரையில் கண்டுகளிக்க ஒரு வாய்ப்பு.

அலுவலகத்தில் தகவல்களைக் கேட்டறிந்தபின், ''சயன ஆரத்தி எத்தனை மணிக்கு முடியும்?'' என்று கேட்டோம். அவர் கூறிய தகவலில் வேறொரு எதிர்பாராத கோணம். ''சயன ஆரத்தி முடிய இரவு ஒரு மணி கூட ஆகலாம். அதுவரை அந்த லாக்கர் கடை திறந்திருக்காது. உடனே போய் உங்கள் உடைமைகளை நீங்கள் தங்கியிருக்கும் அறையில் வைத்துவிட்டு வாருங்கள். இன்னும் பதினைந்து நிமிடங்களில் கோயில் கதவைச் சாத்திவிடுவார்கள். அதற்குப் பிறகு அனுமதி இல்லை'' என்றார். அவர் சொன்னபடியே செய்துவிட்டு, மூச்சிரைக்க மீண்டும் ஆலயத்தினுள் நுழைந்தோம்.

சின்னச்சின்ன அதிர்ச்சிகள், எதிர்பாராத சிலிர்ப்புகள், ஆங்காங்கே சில சிரமங்கள் எல்லாமே இணைந்திருந்தால் தானே எந்த உலாவும் (அதுவும் பக்தி உலா) வருங்காலத்தில் எண்ணி மகிழத் தக்கதாக இருக்கும்.

**வி**ட்டலனைக் கண்டோம். ஆஹா, அது ஒரு தெவிட்டாத தரிசனம். மணிமுடி. காதுகளில் பெரிய மகர (மீன் வடிவ) குண்டலங்கள். சங்கு சக்கரமின்றி, இரு கைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு, மலர்ந்த முகத்துடன், ஏதோ நமக்காகவே காத்திருப்பது போன்ற தோற்றத்தில் காட்சியளிக்கிறார் விட்டலன்.

அதுவும் 'பாத ஸ்பரிச தரிசனம்' என்று அழைக்கப்படும் சிறப்பு கொண்ட சிலிர்ப்பு அங்கு கிடைக்கிறது. விட்டலனின் பாதங்களில் நம் தலையை வைத்து சரணாகதி அடையும் சந்தோஷத்தை பண்டரிபுரத்தில் பெற முடிகிறது.

அவரது பாதங்களில் நம் முகம் பதித்த அந்த ஒருசில கணங்களில் கண்ணனே நம்மை ஆசீர்வதித்ததான உணர்வு தோன்ற கண்களில் நீர் அரும்பியது. விட்டல நாம கோஷம் நிறைந்திருந்தது.

**வி**ட்டலனின் சரிதம் ஈடு இணையற்ற சிறப்பு கொண்டது. குக்குட முனிவரின் ஆசிரமத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் அந்தப் பெண்களிடமிருந்து தொடங்குவோம்:

அந்த மங்கையர் அனைவருக்குமே வெகு லட்சணமான முகங்கள். ஆனால், உடல் ஏனோ வனப்பின்றிக் காணப்பட்டது. தளர்வான நடையோடு குக்குட முனிவரின் ஆசிரமத்தை அடைந்தனர் அவர்கள்.

அவர்கள் அறியாது இதைக் கவனித்தான் புண்டலீகன் - காசி யாத்திரைக்குச் செல்லும்போது அன்றிரவு அசதியைப் போக்கிக் கொள்ள அந்த ஆசிரமத்தை ஒட்டியிருந்த ஒரு சத்திரத்தில் குடும்பத்தோடு தங்கியிருந்தவன்.

'குடும்பத்தோடு காசி யாத்திரை' என்றவுடன் உயர்வாக நினைக்கத் தோன்றும். ஆனால், புண்டலீகனின் செயல்கள்

## அபங்க அமுதம்-3

ஆவடே ஹே ரூப கோஜிரே ஸகுண
பாஹதா லோசன ஸுகாவலே
ஆதாம் த்ருஷ்டிபுடே ஐஸாசி தூ
ராஹேம்
ஜோமீ துஜ பாஹே பாண்டுரங்கா
லாஞ்சாவலே மன லாகலீஸே கோடீ
தே ஜீவே ந ஸோடீ
ஐஸே ஜாலே
துகா ம்ஹணே ஆஹீ மாகதே லடிவாளீ
புரவாவீ ஆளீ மாயபாப

- பக்த துகாராம்

''பாண்டுரங்கா, உன் அழகும் வடிவமும் எனக்குப் பிரியமானவை. அவற்றால் என் கண்கள் பயனடைந்தன. என் கண்முன்னால் தொடர்ந்து இரு. என் மனம் உன் வனப்பு கண்டு அதற்கு அடிமையாகிவிட்டது. ஜீவன் உள்ளவரை நான் அதை விடமுடியாதவனாகிவிட்டேன். நீயே என் தாய், தந்தை. இந்த செல்லக் குழந்தையின் ஆசையைப் பூர்த்தி செய்.''

அருவருக்கத்தக்கவையாகவே விளங்கின. திருமணமானவுடனேயே பெற்றோரை அலட்சியப்படுத்தினான். உரிய மரியாதையை அளிக்காதது மட்டுமல்ல, கொடுமையான செயல்கள் மூலம் அவர்களை அவமரியாதை செய்யவும் அவன் தயங்கவில்லை.

மனம் நொந்து போன புண்டலீகனின் தாயும் தந்தையும் காசி யாத்திரை செல்ல முடிவெடுத்தனர். தொடக்கத்தில் 'விட்டது தொல்லை' என்று நினைத்தாலும் புண்டலீகனின் மனைவிக்கு வேறொரு குறுக்குச் சிந்தனையும் எழுந்தது. கணவனிடம், ''அவர்கள் மட்டும் காசிக்குச் சென்று புண்ணியம் சம்பாதிப்பானேன்? நாமும் செல்வோம்'' என்றாள்.



* புண்டலீகன்

**மனம் நொந்துபோன புண்டலீகனின் தாயும் தந்தையும் காசியாத்திரை செல்ல முடிவெடுத்தனர்**

நால்வருமாக காசிக்குக் கிளம்பிய கோலத்தைப் பார்த்து ஊரே திகைத்தது. திகைப்புக்குக் காரணம் ஒற்றுமையல்ல. குதிரையின் மீது புண்டலீகனும் அவன் மனைவியும் ஏறிக்கொள்ள, புண்டலீகனின் பெற்றோர் நடந்தே வரும்படி பணிக்கப்பட்டனர்!

குதிரை வேகமாகச் செல்வதும், ''இவ்வளவு மெதுவாகவா நடப்பது? சீக்கிரம் வந்து தொலையுங்கள்'' என்று சோர்ந்த நடையுடன் வந்து கொண்டிருக்கும் முதிய பெற்றோரை நோக்கிக் கூப்பாடு போடுவதுமாக வந்துகொண்டிருந்தனர் புண்டலீகனும் அவன் மனைவியும். இந்த நிலையில்தான் களைப்பாறிச் செல்வதற்காக ஓரிடத்தில் தங்கிய புண்டலீகன், முனிவரின் ஆசிரமத்தை நெருங்கிய நங்கைகளைப் பார்த்தான். 'யார் இவர்கள்?



## நீங்கள் கேட்டவை

# தராசு




மின்னல் வேக தைரிய

● பவானி கிருஷ்ணா,
பெங்களூரு

? அப்பா - அம்மா தேர்தலில் வாக்களித்தால், அவர்கள் குழந்தைகளுக்குக் கூடுதல் மதிப்பெண்கள் என்று புனேயில் ஒரு பள்ளிக்கூடம் அறிவித்துள்ளதே? இதே ஏற்பாட்டுக்கு மேலும் பல பள்ளி முதல்வர்களைச் சம்மதிக்க வைக்கும் முயற்சியும் நடக்கிறதே? இது பயன் அளிக்குமா?

! ஜனநாயகக் கடமையைச் செய்ய அரசியல்வாதிகளிடம் பணம் பெறுவது எப்படி குற்றமோ, அப்படித்தான் இதுவும்! நாளடைவில் இதிலும் கட்சி அரசியல் புகுந்து விடும்.

## சுவிஸ் வங்கிப் பணம் வெளியே வருமா?

● குலசை க.மீ.நஜ்முதீன்,
காயல்பட்டினம்

? இப்போதைக்கு அதிக பலம் வாய்ந்த கட்சி தி.மு.க.வா? அ.தி.மு.க.வா? தே.மு.தி.க.வா?

! வோட்டுக்களில் அ.தி.மு.க.; கூட்டணியில் தி.மு.க.; கொள்கையில் தே.மு.தி.க.

● என்.சண்முகம்,
திருவண்ணாமலை

? அ.தி.மு.க.-தி.மு.க. இரண்டுடனும் கூட்டணி சேர மறுத்து, தனியே தேர்தலைச் சந்திக்கும் விஜயகாந்த் 'அரசியல் திருநங்கை' என்று தி.மு.க. மாணவரணி செயலர் இள.புகழேந்தி பேசியிருப்பது பற்றி?



* சோனியா போற்றி!

! அந்தச் சொல்லே ஒரு கௌரவம் தருவதற்காக உருவாக்கப்பட்டது என்பதை மறந்து, ஒருவரை மட்டம் தட்டுவதற்காக திருநங்கை என்று வர்ணிப்பது மனிதாபிமானமற்ற கொடூரம்.

● எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

? வரலாறு எப்போதுமே இடதுசாரிகளின் பக்கம்தான் என்கிறாரே டி.ராஜா?

! வரலாறு என்றால் அதில் தவறான பக்கம், சரியான பக்கம் என்பது கிடையாது. உண்மைப் பக்கங்கள் மட்டுமே உண்டு. மற்ற ரகங்கள் வரலாறு அல்ல; கட்டுக்கதைகள்.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

**? லாலுவின் பதினைந்து ஆண்டுகால ஆட்சியில் பின் தங்கியது பீஹார் என்று குற்றம் சாட்டுகிறாரே சோனியா?**



✱ வரலாற்றுப் பிழை!



✱ பெருமை இழப்பு...

! கவலைப்படாதீர்கள். தேர்தல் முடிந்த பிறகு, லாலு மத்தியில் காங்கிரஸ் தலைமையில் கூட்டணி ஆட்சி அமைய உதவும் போது, 'ரயில்வேதுறை அவரால்தான் வியத்தகு முன்னேற்றங்களைக் கண்டது' என்று சோனியா போற்றுவார்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**? ''அத்வானியுடன் டீ.வி.யில் பொது விவாதம் நடத்த நான் விரும்பவில்லை; மாற்றுப் பிரதமர் என்ற கௌரவத்தை அவருக்கு அளிக்கவும் விரும்பவில்லை'' என்று மன்மோகன் சிங் கூறுகிறாரே?**

! சவாலே சமாளி!

● பி.கோபி, கிருஷ்ணகிரி

**? தற்போதைக்கு தராசுக்கு அச்சம் தருகிற விஷயம் எது?**

! பயங்கரவாதம், பொருளாதாரச் சரிவு, இலங்கைத் தமிழர் நிலை போன்றவற்றையெல்லாம் விட அதிக அச்சம் தருவது வோட்டுக்காக பணம் பெறும் போக்கு. இதற்கு டோக்கன் சிஸ்டம் வேறு! ஜனநாயகமே குழிதோண்டிப் புதைக்கப்பட்ட பிறகு மற்ற பிரச்னைகளை தேசம் எவ்வாறு சமாளிக்க முடியும்?

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

**? ஆங்கிலத்தைவிட பிராந்திய மொழிகள்தான் வலுவான இந்தியாவை உருவாக்க முடியும் என்கிறாரே முலாயம் சிங் யாதவ்?**

! இந்திய ஜனநாயகத்தின் வலுவான தூண்கள் பிராந்திய மொழிகள். அவற்றை இணைத்து, மாளிகையின் தளவரிசைகளாக விளங்குவது ஆங்கிலம். இந்த யதார்த்த நிலையை மாற்ற முயற்சி செய்வது அறிவீனம்.

● ஜி.ஆர்.ராகவன், காகிதபுரம் (கரூர்) ★

**? ஆட்சிக்கு வந்தால், சுவிஸ் வங்கிகளில் உள்ள கறுப்புப் பணத்தை வெளிக் கொண்டு வருவதாக பா.ஜ.க. கூறுகிறதே?**

! கறுப்புப் பணம் மீது கை வைக்கப்படும் என்று தெரியவந்தால், அது கம்ப்யூட்டர் உதவியுடன் தேசம் மாறி, வங்கி மாறி, மின்னல் வேகத்தில் போய்விடும் - அந்த தைரியத்தில் அத்வானி பேசுகிறார்! என்றாலும், கறுப்புப் பணம் பற்றிய விழிப்புணர்வை மக்களிடையே பரவலாக்கும் இந்த முனைப்பு வரவேற்கத்தக்கதே!

● வசந்தாகாந்த், கருப்பம்புலம்

**? ''சோனியா என் ஆட்சி நிர்வா**

☐ ரூ.150/- பரிசு பெறுபவர்:

ஜி.கீர்த்தனா, நெய்வேலி



✱ பாதி உண்மை!



✱ எதிர்க்கும் யதார்த்தம்!

கத்தில் எப்போதுமே தலையிட்ட தில்லை'' என்கிறாரே மன்மோகன் சிங்?

! ''சோனியா தலையிடுவதில்லை; நான் தான் அவரிடம் போய் கலந்தாலோசிப் பேன்'' என்கிறார்.

● அ.கு.கிருஷ்ணன், புதுச்சேரி

? தேர்தல் நாளன்று வாக்காளர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

! வெயிலுக்குப் பயந்து சீக்கிரமாகவும், மனசாட்சிக்கு விரோதமின்றி தைரியமா கவும் வாக்களிக்க வேண்டும்.

● எஸ்.பட்டம்மாள், கும்பகோணம்

? தமிழகத்தில் உள்ள சிலரின் தவ றான வழிகாட்டுதலால், தவறான முறை களை விடுதலைப்புலிகள் கடைப்பிடிப் பதால்தான் இலங்கைப் பிரச்னை முடிவுக்கு வரவில்லை என்கிறாரே முதல் வர்?

! அப்பாடா! ஒரு வழியாக பகுதி அளவு உண்மையையாவது ஒப்புக் கொண்டார்! ''அந்தச் சிலரில் நானும் ஒருவன்'' என்று கூறியிருந்தால் அது முழு உண்மையாக இருந்திருக்கும்.

★ ரூ 75/- பரிசு பெறுபவர் :

ஜி.ஆர்.ராகவன், காகிதபுரம்

● வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61

? மக்கள் மத்தியில், அதிக அளவில் அறிமுகம் இல்லா மல் இருந்த வருண் காந்தியை உலகுக்கே அறிமுகப்படுத்தி யதில் மாயாவதிக்குப் பங்கா? அல்லது சோனியாவுக்கா?

! இருவரைக் காட்டிலும், அவரை வேட்பாளராக்கிய பா.ஜ.க.வுக்குத்தான் முக்கியப் பங்கு; அவருக்குச் சொற்பொழி வைத் தயாரித்துக் கொடுத்த வெறியருக்கு அதிகப் பங்கு!

● ஏ.எஸ்.யோகானந்தம், ஔவையார்பாளையம்

? பத்ம விழாவைப் புறக்கணித்த டோனி, ஹர்பஜன் சிங் மீது கிரிமினல் வழக்கு பதிவு செய்துள்ளது சரியா?

! சரியல்ல. புறக்கணிப்பு வேறு; இய லாமை வேறு. பரிசளிப்பு விழாவுக்கு, குறித்த தேதியில் போக முடியாதபடிக்கு, அவர்களுக்கு ஏதேனும் அலுவல் இருந் திருக்கலாம். வராமலிருந்தது, டோனி - ஹர்பஜனுக்குத்தான் இழப்பே தவிர, ஜனாதிபதிக்கு அல்ல.

● ஜி.கீர்த்தனா, நெய்வேலி ❒

? பதினொரு வயது மாணவி ஷன் னோவைக் கொடுமைப்படுத்தி, இறந்து போகும்படி செய்த ஆசிரியர் மஞ்சு போன்றவர்களை என்ன செய்யலாம்?

! மனநோய் பரிசோதனைக்குத்தான் உட்படுத்த வேண்டும்! இதன் மூலம் நாம் கற்கும் பாடமாக, அனைத்து ஆசிரியர் களையும், தேர்வு செய்யும் காலத்திலேயே மன வளப் பரிசோதனைக்கு உட்படுத்தி, பின்னர், அவ்வப்போது அவர்களை மன வளப் பயிற்சிக்கும் அனுப்பும் நடைமுறை உருவானால், அது ஷன்னோவின் நியா கத்தில் விளைந்த நற்பயிராக அமையும்.

## காற்று வரும் பருவம்!

**அ**ழுது தீர்ந்தபாடில்லை. இந்த நேரத்தில் ப்ரியத்தையும், அன்பையும், சினேகத்தையும், அழுதுதானே காட்ட முடியும். சிறுவர்கள், வயதானவர்கள், பெண்கள் என்று யாருக்கும் தூக்கம் பிடிக்கவில்லை. வெளியூர் ஜனங்கள் இருட்டில் கிளம்பி வந்திருந்தன. எல்லாம் அழுகையும் விறைப்பாகவும்தான் இருந்தன.

''யப்பா சண்டை சச்சரவு இப்ப வேணாம்.''

''இது பெரிய மனுஷன் பேசற பேச்சாப்பா?''

''இந்த ஊர் நெலமையே வேற.''

''என்னா வேற? இத்தன பேர் இருந்துகிட்டு அவிங்களை அடிச்சுக் கொல்லாங்காட்டி என்னாப்பா செஞ்சீங்க?''

''குண்டக்கா மண்டக்கா பேசாத.''

''ஐயா நா வேற சாதிக்காரன்தான். தம்பி கபடி விளையாட்டுலெ பழக்கம். இப்ப 'ம்'னு சொல்லுங்க. ஒரு லாரி ஆள தெரட்டிக் கொண்டாந்திடுறேன்.''

''அப்புறம் அவிங்க கொண்டு வரமாட்டானா?''

''இப்படிப் பயலெ வெச்சுக்கிட்டு என்னா செய்யச் சொல்றே...''

''ஏ முத்தம்மா நீ சித்த சும்மா இருடி. ஆம்பளையாளுக பேசிக்கட்டும்.''

''நம்ம ஊர்லெ ஆம்பளை ஆளுகளும் இருக்காங்களாக்கும்.''

இரண்டு மூன்று பெண்கள் மண்ணை வாரி தூற்றிக் கெட்ட வார்த்தையில் திட்டினார்கள். ஒரே ஒரு கணம்தான். கடைசியில் அது நடந்தேவிட்டது. மாயாண்டித் தேவரும், தூசியாபிள்ளை மவனும் மூக்கையா ஆசாரி மவனும் இன்னும் ஏழு எட்டு இளவட்டங்களும் கம்பும் கத்தியுமாக வடக்குத் தெருவுக்குள் புகுந்துவிட்டார்கள். ஒன்றும் தெரியாத அப்பாவிக் கூட்டம் ஒன்று தெருவில் படுத்துக் கிடந்தது. இங்கொன்றும் அங்கொன்றுமாய் தூங்கிக் கொண்டிருந்தது.

திமுதிமுவென்று ஓட்டமும் நடையுமாக ஜனங்கள் வரவும் கோயில்மாடுதேன் ஓடி வருகிறதோ என்று ஒன்றிரண்டு பேர் விசுக்கென்று விழித்தனர். என்னவோ நடக்கப் போகிறது என்று யூகிப்பதற்குள் மடமடவென்று அடி விழுந்துவிட்டது. முதுகு, முகம் என்று கண் தெரியாத அடி. எல்லாம் அலறியடித்துக் கொண்டு ஓடிற்று. மாட்டுக் காடிக்குள் புகுந்து பால் மாடு, காளை மாடு என்று அவிழ்த்து தெருவில் விட்டு அடிக்கவும். அது திசை தெரியாது தாவி ஓடிற்று. மாடு முட்டி, மோதி இரண்டு மூன்று பேருக்குக் காயம். இப்படி இரவில் புகுந்து அடிக்கவும் எல்லாம் கூக்குரல் எழுப்பின. பெண்களும், குழந்தைகளும் திகைத்துப் போய் பயத்தில் வீறிட்டனர். இப்படி இரண்டு மூன்று தெருக்களுக்குள் நுழையவும் வடக்குத் தெருவும் விழித்துக் கொண்டது.

அங்கிருந்து ஒரு கூட்டம் கிளம்பிற்று. உனக்கு இது தெரிந்தால் எனக்கு என்ன தெரியும் என்று காட்டுகிறேன் என்று கிளம்பிற்று. இவர்களின் வயல்களுக்குத்

4

தீ வைத்து விட்டார்கள். அறுவடைக்குத் தயாராக இருந்தது. அறுப்புக்கு நாள் குறித்த நெல் கதிர் எல்லாம் தீக்கு இரையாகிவிட்டது. 'நீ குடியிருக்கிற குடிசைக்

குத்தானே தீ வைத்தாய்' என்று வைக்கோல் படப்புக்குத் தீ வைத்தார்கள். மடமடவென்று வான் நோக்கி எறிந்தது.

இருட்டோடு இருட்டாகவே ஏழு எட்டுப் பேர்களை போலீஸ் வீடு புகுந்து தூக்கிக்கொண்டு போய் விட்டது. ஜெயபாலை அடித்ததில் ஒருவன் மட்டும்தான் பிடிபட்டான். மற்றவர்களை போலீஸ் தேடுகிறது. எல்லாம் தோட்டம் துரவு என்று ஓடி ஒளிந்து கொண்டனர். காலையில் நாட்டாமைக்காரர் வீட்டில் கூட்டம். குடியானவர்களில் முக்கியஸ்தர்கள் மட்டும் கூடினர்.




''நம்ம பயக யார் யாரை போலீசு பிடிச்சுட்டுப் போயிருக்கு?''

''நம்ம சுப்பன், மூக்கையா ஆசாரி இருக்காரே அவர் மவன் வெள்ளைச்சாமி, குழந்தைப் பயல், தேவாங்கு மவன்...''

''நம்ம பயல்களே அஞ்சு பேரு கணக்கா இருக்கே.''

''அவங்கள்ளயும் இந்தக் கணக்கு வரும்.''

''ஆனா முக்கியமானவங்க எல்லாம் தப்பிச்சுட்டான்.''

''போலீசுலெயும் ரெண்டு மூணு ஆளுக அவிங்க ஆளுக. அதான் முக்கியமான ஆள் எல்லாம் வுட்டுட்டான்.''

''அதெல்லாம் பேச வேண்டாம்.''

''அதான் நடந்திருக்கு.''

''நம்மளாலெ சும்மா இருந்த ரெண்டு பேரையும் புடிச்சிட்டுப் போயிட்டது.''

''இவிங்கள எப்படி வெளியிலெ கொண்டார்றது..?''

''பாளையத்து வக்கீலெ கலந்துகிட்டு, எப்படினா கொண்டாந்திடலாம்.''

''செலவுத் தொகைக்கு...?''

''தல கட்டுக்கு இம்புட்டுனு வசூல் பிரிக்கணும்.''

''பிரிக்கலாம். முடிஞ்சவங்கட்ட கொஞ்சம் உண்டனா கேப்போம்.''

''பண்ணிட்டாப் போச்சு. நா ஆயிரமோ அதுக்கு மேலயோ தாரேன்.''

எல்லோரும் தோழியப்பிள்ளை முகம் பார்த்தனர்.

''நா ஒரு ரெண்டாயிரம்.''

''நாட்டாமைக்காரர்...?''

''நா ஒரு ஆயிரம். மேற்கொண்டு ஆகுறதையும் பார்த்துக்கிறேன்.''

''ரிசர்வ் போலீசு ஒரு மாசத்துக்கு நம்ம ஊர்ல இருக்கும். முப்பது பேருகிட்ட இருக்காங்க. அவிங்க பக்கம் பதினைஞ்சு. நம்ம பக்கம் பதினைஞ்சு ரோந்துலெ இருக்கும். அப்ப அப்ப காப்பி தண்ணினு வாங்கித் தரணும். ராவுலெ தூங்க எடம் கேக்குறாங்க. நா நம்ம ஸ்கூல்லெ படுக்கச் சொல்லியாச்சு'' என்றார் தோழியப் பிள்ளை.

''வம்பு தும்புனு இல்லாம இருக் கணும்'' என்றார் தேவர்.

''அதச் சொல்லுங்க...''



''இனி வடக்குத் தெருவுக் காரங்ககூட ஒட்டோ உறவோ வேண்டாம். வேலைக்கும் சரி. கூலிக்கும் சரி. அவிங்கள வெக்கக்கூடாது.''

**கூ**ட்டம் முடிந்ததும் முக்கியஸ்தர்கள் எல்லாம் வேலுப்பிள்ளை வீட்டுக்கு வந்த னர். மனத்துக்குள் அழுது கொண்டே இருந்தார் வேலுப்பிள்ளை. இத்தனை வருட வாழ்க்கையில் அவர் மனம் நேர்மையாக நடந்து கொண்டதற்குப் பரிசா இது? நோவு என்று படுத்திருந் தால்கூட பரவாயில்லை. மூப்பு வந்து முடிந்துவிட்டால் கூடப் பரவாயில்லை. இத்தனை வருடம் பார்த்துப் பார்த்து வளர்த்ததற்கா இந்தப் பரிசு! அல்லது அதற்குச் செலுத்தும் நன்றியா? அதை என்னவென்று சொல்வது. விதி என்று சொல்வதா?

விதி என்பது எல்லோரும் சொல்லும் சாதாரண வார்த்தை. இதை எப்படிச் சொல்வது. மனசுக்குள் தீ மூட்டிக் கொண்டே உட்கார்ந்திருந்தார். ஊரின் ஆரோக்கியத்தை நினைத்துப் பயந்தார். ஆனால் நெஞ்சுக்கூடு அனலாக இருந்தது.

எத்தனை வருடம் ஓயாமல் உழைத் திருப்பான். ஓடப்புதுரை வயல், மேட்டு வயல், ஓயாமாரி வயல் என்று சளையாமல் ஓடிக் கொண்டிருந்தவன். அந்த வயலிலே விழுந்து ஒய்ந்துவிட்டான். இப்படிச் சட்டென்று அவன் ஒய்வைக் கண்டு மிரண்டு தாளமுடியாமல் தவிக்கிறது.

நாட்டாமைக்காரர், தோழியப்பிள்ளை, உறங்காப்புலித்தேவர் இன்னும் ஏழு எட்டு முக்கியஸ்தர்கள். அவர் முன்வந்து உட்கார்ந்தார்கள். அவர்களுக்கு எதையும் சொல்லத் தெம்பு இல்லை. என்ன சொல்ல முடியும்? என்ன செய்ய முடியும்? பாரெல் லாம் கூடி அந்த உசிரைத் திருப்பியா தர

## கைகொடுக்கும் 'கரம்'

''**எ**ங்கெல்லாம் இயற்கையின் சீற்றத் தால் மக்கள் துன்பப்படுகிறார் களோ அங்கெல்லாம் எங்கள் 'கரம்' நீளும். அவர்களின் கண் ணீரைத் துடைக்கும்'' என்கிறார் 'கரம்' அமைப்பின் கமிட்டி மெம்பர் ராஜேஷ் கோவிந்த ராஜுலு. 2004ம் ஆண்டு மாபெரும் சுனாமி தாக்கி தமிழகம் துன்புற்றபோது, மக்களுக்கு உதவும் நோக்கத்தோடு கோவையில் ஆரம் பிக்கப்பட்ட அமைப்புதான் கரம்.

''இதயமுள்ள எல்லோரையும் பதறவைத்த சம்பவம் சுனாமி. அது எங்களையும் பதற வைத்தது. மனிதநேயமுள்ள வனிதா மோகன், எல்.ஜி.குரூப்ஸ் வரதராஜன், ஆர்.ஆர். பாலசுந்தரம்... போன்றோர் ஒன்றுகூடினோம். அதிகமாகப் பாதிக்கப்பட்ட நாகை மாவட்ட மக்களுக்கு ஏதாவது செய்தாக வேண்டும் என எல்லோரும் ஒருமனதாக முடிவெடுத்தோம்.

முடியும்? இப்போது கூட்டம் பேசியதே, தலக்கட்டுக்கு இவ்வளவு என்று வசூல் பிரிக்கலாம் என்று. அப்படித்தான் கூடிக் கொடுத்து விடமுடியுமா? நாட்டாமைக் காரரால் ஒன்றும் பேசமுடியவில்லை. வேலுப்பிள்ளையை அவர் சம்சாரத்தை, கோவிந்துவை மாறி மாறிப் பார்த்துவிட்டு தலையைக் குனிந்து கொள்வதைத் தவிர என்ன செய்ய முடிகிறது? வாய்திறந்து பேசவா முடிகிறது? தோழியப்பிள்ளை யின் உடம்பு லேசாக நடுங்கிற்று. நடுக் கத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டார். அவரால் முடியவில்லை.



மேலே சொன்ன பெரியவர் கள் அளித்த உதவியால் கரம் அமைப்புக்குக் கிட் டத்தட்ட 4.5 கோடி ரூபாய் நிதி ஆதாரம் கிடைத்தது. அடுத்த நாளே நாகைக்கு எட்டுப் பேர் கிளம்பிச் சென்றோம். அங்கே சுனாமியால் அதிகமாகப் பாதிக்கப் பட்ட மீனவக் கிராமம் காமேஷ்வரத்தைத் தத்தெடுத்தோம். 300 சதுர அடி கொண்ட கிட்டத்தட்ட 2 லட்சம் மதிப்பு கொண்ட 80 வீடுகள் கட்டித் தரப்பட்டன. கடலில் அடித் துச் செல்லப்பட்ட படகுகளுக்குப் பதிலாக வேறு படகுகளும் தரப்பட்டன. இவ்வளவை யும் எட்டுப் பேர் அடங்கிய ஒரு குழுவால் செய்ய முடிந்ததில் எனக்கே ஆச்சர்யமாக இருந்தது. அந்தத் திருப்தி கொடுத்த ஊக்கம் தான் எங்களை இப்போதும் செயல்பட வைக்கிறது'' என்னும் ராஜேஷ், ''எங்கேனும் இதுபோன்ற மிகப் பெரிய அளவு பாதிப்பு ஏற்பட்டால் கரம் அமைப்பைத் தொடர்பு கொள்ளலாம்'' என்கிறார்.

சட்டென்று எழுந்து கொண்டார். கண் ணில் கட்டியிருந்த நீர் நெஞ்சில் விழுந் திற்று. உறங்காப்புலித்தேவர் மட்டும் வாய்திறந்து ஏதோ சொன்னார். அதுகூட தெளிவில்லை. அவர் வாய் குழறிற்று. ஒரு மணி நேரம் இப்படியே கடந்திற்று. எல் லாம் வந்து போனபின், விளக்கு வைப் பதற்கு சற்று முன் வாசலில் நிழல். கோவிந்துதான் எட்டிப் பார்த்தான். மண்டையன்!

''ஐயா... ஐயா...'' அவன் கூச்சல் வீட்டையே உலுக்கிவிட்டது.

'ப்சு' ஐயா முகத்தை மூடிக்கொண்டார்.

'' 'தொபுகடீர்னு' இந்த நெஞ்சுலெ தேன்யா சாஞ்சார்'' என்று மடேர் என்று தன் நெஞ்சில் அடித்துக் கொண்டார். இத்தனை முரட்டு மனிதன் அழுவது பார்க்க என்னவோ போல் இருந்தது.

''முடியலெயா. தூங்க முடியலெயா. ஒரு எடத்துலெ உக்கார முடியலெயா...''

''ப்சு.''

''வயக்காட்டுப் பக்கம் போக முடி யலெ. அய்யாவும் கூடவே வர்றாப்புலெ இருக்கு. ஒவ்வொண்ணுக்கும் கோளாறு சொல்லுவார்... அவரு காலயே சுத்தி வந்துட்டேன். இப்ப கண்ணைக் கட்டி வுட்டாப்புலெ இருக்கு...''

ஐயா எங்கோ பார்த்து மூக்கை உறிஞ்சிக் கொண்டார்.

''நீங்க வெடிப்பா இருங்கய்யா.''

தலையை ஆட்டினார்.

''அவரு தெய்வமா நின்னு நம்மளக் காக்கட்டும்.''

''ம்.''

''அப்புறமா வாரேன். ஒங்க முகத் தைப் பாக்க திராணி இல்லாம இருந்தேன். ரெண்டு நாளா கோயில்லெ படுத்துட் டேன்...''

''சாப்பிட்டுப் போ'' அப்பா பேசிய முதல் வார்த்தை. இதைக் கேட்டதும் அவன் முகம் கோணிவிட்டது. உதடு, நாக்கு, முகம் எல்லாம் கோணிவிட்டது. எழுந்தவன் தொடை நடுங்கிவிட்டது. இரண்டு கையாலும் முகத்தை மூடிக் கொண்டு அழுதுவிட்டான்.

**(காற்று வீசும்)**

## கிரேஸியைக் கேளுங்கள்

● அனன்யா, பெங்களூர்

வைணவரான நீங்கள், கல்கியில் 'வாரம் ஒரு பாசுரம்' எழுத முயற்சிக் கலாமே....?

வைணவரெல்லாம் சுஜாதாவாகி விட முடியாது. அவர் எழுத்தில் 'ஆயிரம் காலத்துப் பயிர்'. பாசுரத்திலோ 'நாலாயிரங் காலத்து நடவு'. 'வாரம்' என்ற வார்த்தைக்கு நட்பு அல்லது நெருக்கம் என்றும் ஒரு அர்த்தம் தமிழில் உண்டு. சுஜாதாவுக்கு ஆழ்வார்களின் வாரமும் உண்டு. ஆராமுதனின் வரமும் உண்டு.





● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**வாழ்க்கை என்பது யாத்திரையா, போராட்டமா, வேள்வியா?**

நடந்தால் யாத்திரை... ஓடினால் போராட்டம்... அமைதியா அமர்ந்தால் வேள்வி. யாத்திரைக்குக் கால் வேண்டும்; போராடக் கை வேண்டும்; வேள்விக்கு மனம் இருந்தால் போதும். மார்க்கம் உண்டு. போராடாமல் நிம்மதியாக யாத்திரை செய்யலாம்.

● **சண்முகம், கொங்கணாபுரம்**

**தேர்தல் வருகிறது. நீங்கள் ஏன் சுயேச்சையாக நிற்கக் கூடாது?**

தேர்தல் வந்தாலும் வராவிட்டாலும் நான் நிற்கும்போது தடுமாறாமல் சுயேச்சையாகத்தான் நிற்பேன். இன்னும் ஒரு இருபது வருடம் கழித்து, ஒருவேளை தள்ளாமையால் சுயேச்சையாக நிற்க முடியாமல் போனால், தாங்கிக் கொள்ள மனைவியின் கூட்டணி தேவைப்படலாம்.

# ஆணாகப் பிறந்ததால் வருத்தமா?

● **வாசுதேவன், அயிரோலி**

**பய பக்தியுடன் உச்சரிக்கும் மந்திரம்?**

'மனைவி சொல்'

● **எம்.அசோக்ராஜா, திருச்சி**

**ஆணாகப் பிறந்து விட்டதற்காக வருத்தப்பட்டதுண்டா?**

ஆணாக இருந்தால்தான் பெண்மையை ரசிக்க முடியும். அதனால் நல்லவேளை பெண்ணாகப் பிறக்கவில்லையே என்று சந்தோஷப்பட்டதுண்டு!

● **சங்கரி, பாலக்காடு**

**கடைத் தையலுக்கும், காதலிக்கும் தையலுக்கும் என்ன ஒத்துமை?**

இரண்டுமே பிரிந்து போகும். கடைத் தையல் பிரிந்தால் நூல் நூலாகும். காதலித்த தையல் பிரிந்தால் உள்ளம் நொந்து நூலாகும். கடைத் தையல் பிரிந்து கந்தையானால் கசக்கிக் கட்டலாம். காதலித்த தையல் பிரிந்து காதல் கந்தையானால், கண்ணைக் கசக்கி பெற்றோர் பார்த்த பெண்ணின் கழுத்தில் தாலியைக் கட்டலாம்.

● **எ.லட்சுமி வாசுதேவன், வேளச்சேரி**

**பசிப்பதால் புசிக்கிறோமா ? புசிக்க வேண்டும் என்பதால் பசிக்கிறதா?**

பசிப்பதால் புசிப்பது உணவு. புசிக்க வேண்டும் என்பதற்காகப் பசித்தால் அது திணவு. பசிப்பதால் புசிப்பவர்கள் சாப்பாடு கேட்பார்கள். புசிப்பதற்காக பசிப்பவர்கள் கூப்பாடு போடுவார்கள்.

● **ஜே.துரைராஜ், சென்னை**

**கிட்டப் போனால் எட்டிப் போகும் என்கிறார்களே. அது என்ன?**

Proximity breeds contempt என்பார்கள் ஆங்கிலத்தில். அது போல எதுவும் கிட்டப் போனால் எட்டிக் காயாய்க் கசந்து போகும்.

● **ரேவதிப்ரியன், ஈரோடு**

**'ஹரிதாஸ்' சினிமாவை நீங்கள் ரீ-மேக் செய்தால்....?**

'சிரிதாஸ்'....!

● **மீனா ரெங்கனாதன், மேற்கு மாம்பலம்**

**உங்களிடம் உள்ளது என்ன மாடல் கார்?**

என் மாடல் ஐயங்'கார்'. ஆட்டுக்கு வாலை அளந்து வைத்தது போல, என் வீட்டுக்கு வாசலை அளந்து வைத்திருக்கிறார்கள். லாரியே உள்ளே நுழைந்தாலும் திரும்ப எடுக்கும்போது நசுங்கி 'சாண்ட்ரோ' ஆகிவிடும்.

# பாலிடிக்ஸ் போட்டி-3




இங்கே சில அரசியல் வாதிகளின் பெயர்கள், இன்றைய சூழலில் இவர்களுக்குப் பொருந்தும் பாடல் வரிகள் தரப்பட்டுள்ளன. எந்தப் பாடல் யாருக்குப் பொருந்தும் என்பதை எழுதுங்கள். சரியான விடையெழுதும் பத்து பேருக்கு குலுக்கல் முறையில் தலா ரூ.100/- பரிசு. தவிர, மிஞ்சும் தலைவருக்கு நீங்களே பொருத்தமாக ஒரு சினிமா பாடலின் முதல் வரியை எழுதுங்கள். தேர்ந்தெடுக்கப்படும் அந்தப் பாடல் வரி எழுதும் வாசகருக்கு ரூ.1000/- பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**கடைசி தேதி : 08.05.09**

| | |
|---|---|
| 1. கலைஞர் | அ. மாம்பழமாம் மாம்பழம் சேலத்து மாம்பழம்... |
| 2. எஸ்.எஸ்.சந்திரன் | ஆ. தனிமையிலே இனிமை காண முடியுமா... |
| 3. விஜயகாந்த் | இ. கொடுத்தவனே(ளே) பறித்துக் கொண்டா(ன்)டி மானே... |
| 4. லல்லு | ஈ. மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும். அது முடிந்த பின்னாலும்... |
| 5. ராமதாஸ் | உ. சிக்கு புக்கு சிக்கு புக்கு ரயிலே கலக்குது பாரு ஸ்டைலிலே... |
| 6. ஜெயலலிதா | ஊ. வெற்றிமீது வெற்றி வந்து என்னைச் சேரும். அதை வாங்கித் தந்த பெருமை எல்லாம் உன்னைச் சேரும்... |
| 7. திருமா | |

**உங்கள் விடைகள் :**

1. 2. 3. 4.
5. 6. 7.

***உறை மீது பாலிடிக்ஸ் போட்டி - 3 என்று மறவாமல் குறிப்பிடவும்.***

என் பெயர் : ..................................................

விலாசம் : ..................................................

..................................................

..................................................

கல்கியில் விரும்பி வாசிப்பது :

..................................................

